உ

சிவமயம்.

# திருவியலூர்ப் புராணம்.

தேவகோட்டை

நா. கிருஷ்ணசாஸ்திரிகளவர்களால்

புராதன ஏட்டுப்பிரதியிலிருந்து

பரிசோதிக்கப்பெற்ற

வடமொழி மூலமும்

மேற்படியூர்

சொ. வேலுச்சாமிக் கவிராயரவர்களால்

இயற்றப்பெற்ற

தோத்திரத்துடன்

தமிழ்மொழிபெயர்ப்பும்

இவை

மேற்படி

திருவியலூர்த் திருப்பணி செய்துவரும்

தேவகோட்டை

அ. ராம. அ. லெ. அ.

அருணசலஞ் செட்டியாரவர்களால்

கும்பகோணம்

சாரதா விலாஸ பிரஸில்

அச்சிடப்பெற்றன.

ஸ்ரீமுக௵ தைமீ

1934.

இரண்டாம் பதிப்பு.



உ
சிவமயம்.

# திருவியலூர்ப் புராணம்.





தேவகோட்டை
நா. கிருஷ்ணசாஸ்திரிகளவர்களால்
புராதன ஏட்டுப்பிரதியிலிருந்து
பரிசோதிக்கப்பெற்ற
**வடமொழி மூலமும்**
மேற்படியூர்
**சொ. வேலுச்சாமிக் கவிராயரவர்களால்**
இயற்றப் பெற்ற
தோத்திரத்துடன்
**தமிழ் மொழிபெயர்ப்பும்**

---

இவை
மேற்படி
திருவியலூர்த் திருப்பணி செய்துவரும்
தேவகோட்டை
அ. ராம. அ. லெ. அ.
அருணசலஞ் செட்டியாரவர்களால்
கும்பகோணம்
சாரதா விலாஸ பிரஸில்
அச்சிடப்பெற்றன.
ஸ்ரீமுக௵ தைமீ
**1934.**

---

இரண்டாம் பதிப்பு.





உ

சிவமயம்.

# திருவியலூர்ப் புராணம்.



தேவகோட்டை

**நா. கிருஷ்ணசாஸ்திரிகளவர்களால்**

புராதன ஏட்டுப்பிரதியிலிருந்து

பரிசோதிக்கப்பெற்ற

**வடமொழி மூலமும்**

மேற்படியூர்

**சொ. வேலுச்சாமிக் கவிராயரவர்களால்**

இயற்றப் பெற்ற

தோத்திரத்துடன்

**தமிழ் மொழிபெயர்ப்பும்**

---

இவை

மேற்படி

திருவியலூர்த் திருப்பணி செய்துவரும்

தேவகோட்டை

**அ. ராம. அ. லெ. அ.**

**அருணாசலஞ் செட்டியாரவர்களால்**


கும்பகோணம்

**சாரதா விலாஸ பிரஸில்**

அச்சிடப்பெற்றன.

ஸ்ரீமுகஸு தைமீ

**1934.**

---

இரண்டாம் பதிப்பு.




பிரமகுண்டம்—கோவிலுக்கு தென்மேற்கு திக்கில் உள்ளது. இது இப்போது வண்ணான் குளம். சக்கரதீர்த்தம்—கோவிலுக்கு மேற்கு திக்கில் அரிகட்டி வயலில் பெரிய துறவாக இருக்கிறது. சூலதீர்த்தம், கங்கை—திருமஞ்சனவீதிக்கடைசியில் காவேரியில் இருக்கிறது. சடாதீர்த்தம்—கோவிலுக்கு ஈசான திசையிலுள்ளது. இலக்குமிதீர்த்தம்—திருமஞ்சனவீதி காவேரி ஓரம். இப்போது மண்டபத்துக் குளமாக இருக்கிறது. சரசுவதி தீர்த்தம்—கோவிலுக்கு தெற்கு திசையிலுள்ளது. இது இப்போது பாப்பா குளம். நந்திதீர்த்தம்—கோவிலுக்கு எதிரில் கிணறாக இருக்கிறது.

உ

சிவமயம்.

# முகவுரை.

திருவியலூர் என்னும் க்ஷேத்திரம் சோழநாட்டிலே, காவேரியின் வடகரையில், கும்பகோணத்துக்குக் கிழக்கே நாலுமைல் தூரத்திலுள்ளது. இத்தலத்தில் சிவபெருமான் விஷ்ணுமூர்த்தியுடன் கோயில் கொண்டு அநவரதசாந்நித்தியராய் வீற்றிருக்கின்றனர். இது, ஆதியில் வில்வக்காடாயிருந்தமையால் வில்வவனமென்றும், க்ஷேத்திரங்களுக்கெல்லாம் முன்னர்த்தோன்றிய பழமையாலும் புராதனன் என்னும் இராக்ஷதன் இங்கு எழுந்தருளியிருக்கும் சிவலிங்கப் பெருமானுடைய சந்நிதியில் இறந்து பதவி பெற்றமையாலும் புராதனபுரமென்றும் பெயருடையது. இங்கு எழுந்தருளியிருக்கும் சிவலிங்கப்பெருமானுக்கும் முற்காட்டிய காரணத்தால் வில்வவனேசர் புராதனேசர் என்னும் பெயருடன் சிவயோகிநாதர் என்னும் பெயரே பிரசித்தியாய் வழங்கி வருகின்றது. சிவயோகி என்னும் முனிபுங்கவருக்கு அநுக்கிரகஞ் செய்தமையின் சிவயோகிநாதர் என்னும் பெயர் வந்ததெனத் தலபுராணத்தால் விளங்குகின்றது. அடங்கன்முறை இராமசுவாமி பிள்ளையவர்கள் பதிப்பிலும் சுவாமிநாத பண்டிதரவர்கள் பதிப்பிலும் மற்றும் சிலவற்றிலும் இத்தலத்திலுள்ள சிவலிங்கப்பெருமானுடைய திருநாமம் சிவயோகாநந்தர் என அச்சிடப்பட்டிருக்கின்றமை இத்தல புராணம் முன்னரே வெளிவராமையாற்போலும். இத்தலத்திற்குத் திருவியலூர் எனப் பெயர் வந்தமைக்குக்காரணம் தலபுராணத்தால் நன்கு விளங்கவில்லை. திருவியலூர் என்பது தற்போது திருவிசலூர் என்றும் பண்டாரவாடைத் திருவிசநல்லூர் என்றும் வழங்கிவருகின்றது.

இது பிரசித்திபெற்ற நந்திதீர்த்தம், இலக்குமிதீர்த்தம், சரசுவதிதீர்த்தம், பிரமகுண்டதீர்த்தம், கங்கை, சக்கரதீர்த்தம், சூல

தீர்த்தம், § சடாதீர்த்தம் என்னும் எட்டுத் தீர்த்தங்களையும் அவற்றின் கரையில் முறையே நிற்கும் வன்னி, வில்வம், புன்னை, மகிழ், ஆல், நெல்லி, அரசு, வில்வம் என்னும் எட்டு விருக்ஷங்களை யும் உடையது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் அருளிச் செய்த தேவாரப்பதிகம் பெற்றுள்ளது. திருநாவுக்கரசுநாயனார் அருளிச்செய்த ஏனைத்தேவாரப்பதிகத்தினும் கூறப்பட்டுள்ளது.

இன்னும் சிவாகமத்தின் ஞானகாண்டப்பொருளைச் சுருக்கி இனிது விளக்கும் தமிழ்ச் சித்தாந்தசாத்திரம் பதினான்கனுள் ஒன்றாகிய திருவுந்தியார் இயற்றியருளிய உய்யவந்த தேவநாய னாருக்குச் சிஷ்யரும், திருக்களிற்றுப் படியார் இயற்றியருளிய திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனாருக்கு ஆசாரியருமாகிய ஆளுடைய தேவநாயனார் அவதரிக்கப் பெற்றதும், ஸ்ரீதரர் வேங் கடேசார்யர் என்னும் ஐயா அவர்கள் வசித்துக்கொண்டிருக்குங் காலத்தில், பட்டினிகிடந்து இறக்குந்தருணத்திலிருந்த சண்டா ளனொருவனுக்குச் சிராத்ததினத்தன்று தாம் அன்னமளித்தமை தோஷமன்று என நிரூபணஞ் செய்தற்பொருட்டுக் கங்கை வரவ ழைத்தல் முதலிய அற்புதங்கள் நடத்தப்பெற்றதும், தர்க்கம், வியாகரணம், வேதாந்தம், மீமாஞ்சை என்னும் நான்கு சாஸ்தி ரங்களிலும், மற்றும் கிரந்தங்களிலும், சங்கீத சாஸ்திரங்களி லும் வல்ல ஆரியதிராவிடவித்துவசிகாமணிகள் என்றும் நிறையப் பெறுவதும் இத்தலமேயாகும்.

இது தஞ்சாவூர் அரண்மனையாரவர்களின் பரிபாலனத்திற் குட்பட்ட ஆலயஸ்தலங்கள் பலவற்றுள் ஒன்றாயுள்ளது.

---

§ சடாதீர்த்தம் என்பதைச் சடாயுதீர்த்தம் எனச் சிலர் கூறுகின்றனர். இத்தலபுராணத்தில் சடாயு என்பவர் எக்கார ணம் பற்றியாவது இங்கு வந்ததாகவேனும் சரித்திரங் காணப்ப டாமையாலும், இங்கிருந்து தவம்புரிந்த சிவயோகி முனிவரு டைய தபோக்கினியைத் தணித்தற் பொருட்டுச் சிவபெருமா னுற் சடையினின்றும் விடுக்கப்பட்ட கங்கையே சடாதீர்த்தம் எனப் பெயர் பெற்றதாக் காணப்படுகின்றமையாலும் சடாதீர்த் தம் என்பதே பொருத்தமென அறிக.



உ

சிவமயம்.

# திருவியலூர்த் தேவாரம்.



## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்—நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.



குரவங்கமழ் நறுமென்குழ லரிவையவள் வெருவப்
பொருவெங்கரி படவென்றத னுரிவையுட லணிவோ
னரவும் மலை புனலும்மிள மதியுந்நகு தலையும்
விரவுஞ்சடை யடிகட்கிடம் விரிநீர்விய லூரே. (க)

ஏறூர்தரு மொருவன்பல வுருவன்னிலை யானா
னாறூர்தரு சடையன்னன லுருவன்புரி யுடையான்
மாறூர்புர மெரியச்சிலை வளைவித்தவன் மடவாள்
வீறூர்தர நின்றானிடம் விரிநீர்விய லூரே. (உ)

செம்மென்சடை யவைதாழ்வுற மடவார்மனை தோறும்
பெய்ம்மின்பலி யென நின்றிசை பகர்வாரவ ரிடமா
மும்மென்றெழு மருவித்திரள் வரைபற்றிட வுரமேல்
விம்மும் பொழில் கெழுவும்வயல் விரிநீர்விய லூரே. (ங)

அடைவாகிய வடியார்தொழ வலரோன்றலை யதனின்
மடவாரிடு பலிவந்துண லுடையானவ னிடமாங்
கடையார்தர வகிலார்கழை முத்தந்நிரை சிந்தி
மிடையார்பொழில் புடைசூழ்தரு விரிநீர்விய லூரே. (ச)

எண்ணார்தரு பயனாயய னவனாய் மிகுகலையாய்ப்
பண்ணார்தரு மறையாயுயர் பொருளாயிறை யவனாய்க்
கண்ணார்தரு முருவாகிய கடவுள்ளிட மெனலாம்
விண்ணோரொடு மண்ணோர் தொழு விரிநீர்விய லூரே (ரு)

வஞ்சவிற்கொடு வருவேடுவ னவனாய்நிலை யறிவான்
றிசையுற்றவர் காணச்செரு மலைவானிலை யவனை
யசையப்பொரு தசையாவண மவனுக்குயர் படைகள்
விசயற்கருள் செய்தானிடம் விரிநீர்விய லூரே. (சு)

மானார வுடையானிர வுடையான்பக னட்ட
மூனார்தரு முயிரானுயர் விசையான்விளை பொருள்க
டானாகிய தலைவன்னென நினைவாரவ ரிடமா
மேனாடிய விண்ணோர்தொழும் விரிநீர்விய லூரே. (எ)

பொருவாரெனக் கெதிராரெனப் பொருப்பையெடுத் தான்றன்
கருமால்வரை கரந்தோளுரங் கதிர்நீண்முடி நெரிந்து
சிரமாயின கதறச்செறி கழல்சேர்திரு வடியின்
விரலாலடர் வித்தானிடம் விரிநீர்விய லூரே. (அ)

வளம்பட்டலர் மலர்மேலயன் மாலும்மொரு வகையா
லளம்பட்டறி வொண்ணாவகை யழலாகிய வண்ண
லுளம்பட்டெழு தழற்றூணத னடுவேயொரு வுருவம்
விளம்பட்டருள் செய்தானிடம் விரிநீர்விய லூரே. (கூ)

தடுக்காலுடன் மறைப்பாரவர் தவர்சீவர மூடிப்
பிடக்கேயுரை செய்வாரொடு பேணார்நமர் பெரியோர்
கடற்சேர்தரு விடமுண்டமு தமரர்க்கருள் செய்த
விடைச்சேர்தரு கொடியானிடம் விரிநீர்விய லூரே. (க0)

விளங்கும்பிறை சடைமேலுடை விகிர்தன்விய லூரைத்
தளங் கொண்டதொர் புகலித்தகு தமிழ்ஞானசம் பந்தன்
றுளங்கிறமிழ் பரவித்தொழு மடியாரவ ரென்றும்
விளங்கும்புக ழதனோடுயர் விண்ணும் முடை யாரே. (கக)

திருச்சிற்றம்பலம்



சுவாமி திருநாமம்—சிவயோகி நாதர்.
தேவி திருநாமம்—சௌந்தரநாயகி; சாந்தநாயகி
யென்றுங் கூறுவர்.

சிவமயம்.

# திருநாவுக்கரசு நாயனார்.

## க்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

(எ) வீழிமிழலை வெண்காடுவேங்கூர்
வேதிகுடிவிசயமங்கைவியலூர்
ஆழியகத்தியான் பள்ளியண்ணா
மலையாலங்காடுமரதைப்பெரும்
பாழிபழனம் பனந்தாள் பாதாளம்
பராய்த்துறைபைஞ்ஞீலிபனங்காட்டூர்தண்
காழிகடனாகைக் காரோணத்துங்
கயிலாயநாதனையே காணலாமே.

திருச்சிற்றம்பலம்.

## பெரிய புராணம்.

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் புராணம்.



வெங்கண் விடைமேல் வருவார் வியலூரடிகளைப் போற்றித்
தங்கியவின்னிசைகூடுந் தமிழ்ப்பதிகத்தொடைசாத்தி
யங்கணமர்வார் தம்முன்னேயருள் வேடங்காட்டத்தொழுது
செங்கண்மாலுக்கரியார் திருந்துதேவன்குடி சார்ந்தார். (294)

திருச்சிற்றம்பலம்.





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவியலூர்ப் புராணம்.



## தோத்திரம்.



### விநாயகர்.

சீரோங்கு கைலாச மலையிலுமை சிவனருளாற் றிகழும் யானைப், பேரோங்கு பிரணவமந் திரநின்று முதித்தருளிப் பெரு குஞ்சித்தி, தாரோங்கு புத்தியெனு மிருவரையு மிருமருங்கு தழுவி நாளு, நேரோங்கு மன்பர்தொழ வருள்புரியுங் களிற்றினடி நினைந்து வாழ்வாம். (க)

### சிவயோகிநாதர்.

தருநிழல்வா ழிந்திரனு மூவுலகும் படைப்போனுந் தகுந்த செந்தா, மரையிதழ்சூழ் பொகுட்டுறையு மங்கைமண வாளன் மற்றை வானோர் தாமும், வருமனநேர் மையிற்போற்ற வருள்வ ழங்கு சிவபெருமான் வளையினங்கள், பெருவயலூர் திருவியலூர்ச் சிவயோகி நாதனடி பேணி வாழ்வாம். (உ)

தன்னுடைய விச்சைஞா னங்கிரியை யெனுமூன்று சத்தி ரூப, மன்னிநறுஞ் சந்தனத்தின் மணங்கொள்கனி வயங்குவில்வ வனத்தி னுளுந், துன்னுபல கிளைபரப்பி மலருமகி ழடியின் மகிழ் துளங்கி வாழு, மின்னியல்செஞ் சடைப்பெருமான் சிவயோகி நாதனிரு விரைத்தாள் போற்றி. (ங)

### சௌந்தரநாயகி.

தங்கொழுநன் கருத்தையறிந் தவன்மகிழ நிற்பதுவே தகுந்த கற்பின, மங்கையருக் கழகென்று வயக்கவிறை யவன் கொள்ளும் வடிவுக் கேற்ப, வங்கணருள் வடிவுறினு மபின்னையா யனைத்துயிர்க்கு மன்பான் மேன்மை, தங்கவருள் சௌந்தரநா யகிபாத பதுமமலர் தலைமேற் கொள்வாம். (ச)

நிவந்தபிழை புரிதரினு மக்கள்பலர் தாயவற்றை நினையா துள்ள
முவந்துநன்மை பலபுரிவ ளெனறேற்றப் பலகோடி யுயிரா மக்க
ளவந்தருகுற் றங்கள்பல புரிதரினுங் கருணைபுரிந் தளித்த றேற்றுஞ்
சவுந்தரநா யகியென்னுஞ் சாந்தநா யகிசரணஞ் சரண மாமால்.(ரு)

### புராதன விநாயகர்.

தராதல முதலிய சகல லோகமும்
பராவுறின் வளம்பெறு பான்மை தேற்றிட
வராவணி யிறையருச் சனைக்க ருள்புரி
புராதன வைங்கரன் கழல்கள் போற்றுவாம். (சு)

### சுப்பிரமணியர்.

மருவுறப் பிரமன் றன்னை மதித்திடா நிலைமை கண்டு
கருவமுற் றெழிக்க வேதப் பொருள்வினாய்க் கருதிக் குட்டி
யுருவினிற் சிறியர் தாமு முணர்வினிற் பெரிய ராதல்
தெரிவுறத் தேற்றுங் கந்தன் சேவடிக் கமலம் போற்றி. (எ)

### வைரவர்.

திங்களஞ் சடையவன் சினக ரம்மெலாங்
கங்குலும் பகலுமாக் காக்கு மேன்மையோ
னங்களை யாண்டருள் வடுக நாயகன்
றங்குபொற் பதமலர் தலையின் மேற்கொள்வாம். (அ)

### வீரபத்திரர்.

பரனை நிந்தைசெய் தக்கன்முற் பகல்புரி யாகங்
குருதி பொங்கிட வழித்தவண் குறுகும் விண் ணவரை
யுரமு தற்பல குறைத்தவன் றன்னையு மொறுத்த
பொருவில் வீரபத் திரனடி புந்திசெய் திடுவாம். (கூ)

### நடேசர்.

துடியினி லுலகெலாந் தோற்றிக் கையமைத்
திடுதலிற் றிதித்திலங் கெரியிற் சங்கரித்
தடலினூன் றடியினிற் றிரோத மாக்கிநான்
றிடுபதத் தருளுநடேசற் போற்றுவாம். (க0)

## சிவகாமசுந்தரி.

மக்களெலா மழலைகுத லைப்பருவந் தனிற்றந்தை யருணோர் வாய்க்கத், தக்கவரல் லாமையினுற் ருயேயவ் வருள்பெறீஇச் சார்த்து மாபோல், ஆக்கணவ னுகுமிறை யருணடனஞ் சீவர்பொருட் டணுகிக் காணூஉப், பக்கமுறை சிவகாம சுந்தரிதாளெமதுமுடிப் பணியாக் கொள்வாம். (கக)

## தக்ஷிணுமூர்த்தி.

ஆலிலையிற் பள்ளிகொளுந் திருமாலு முறக்கம்வெறுத் தயர்ந்து நோவ, மேலைநிலைப் பொருளுண்மை கைத்தலத்திற் காட்டிநனி விழைந்து வந்த, நாலுமுனி வரர்க்குமுப தேசமுறை யாற்குருவாய் நவிலு மேன்மைக், கோலமுட னுங்கணுறை தட்சிணுமூர்த்திபதங் குறித்து வாழ்வாம். (கஉ)

## விட்டுணு.

ஒருசிவ யோகி நாத னுபயபங் கயநேர் பாதந்
திருமக ளோடு தாழ்ந்து திருவருள் பெறீஇயெந் நாளும்
வருவிடு வசேனன் முன்னு மலிபரி வார தேவர்
அருகுற மகிழ்ச்சி மீக்கூர்ந் தமரரி சரணம் போற்றி. (கங)

## இலக்குமி.

தன்னுடைக் கொழுநன் காவற் றலைவனுய் நிற்றற் கேற்ப
மன்னிய வுயிர்கட் கெல்லாம் வளநல்கி மனைவி காதல்
துன்னுநா யகன்க ருத்தைப் பேணலே சொலுங்கற் பென்றல்
தன்னைநன் குணர்த்துஞ் செல்வி தாமரைப் பாதம் போற்றி. (கச)

## சரசுவதி.

தேவரு முனிவருஞ் சேர்ந்த பல்லுயிர்
யாதையு முளக்கருத் துணர நாவினின்
மேவிநன் கருள்புரி விமலை வெண்மலர்த்
தேவிதன் சேவடி சிரத்திற் சேர்த்துவாம். (கரு)

## சண்டேசுவரர்.

ஈசனுக் காமுண வெழில்கொ ளாடைபூண்
வாசநற் ருரிவை மரபி னிற்கொளீஇப்

பேசுவன் றரிசனப் பேற ளிக்குஞ்சண்
டேசுர னடிமலர் சிந்தைப் பாலதே. (கசு)

### திருநந்திதேவர்.

நந்தி மேல்வந்து நங்கட் கருள்புரி
* நந்தி வாழ்கயி லாயமுன் வாய்தலி
† னந்தி யன்பு நல்முறக் காவல்செய்
நந்தி தேவ னடியிணை நாடுவாம். (கஎ)

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

கான சம்பந்த மாச்செய்முக் கண்ணின னிறைவை
கான சம்பந்த பாஞ்சராத் திரமுணர்த் தரியன்
றூன சம்பந்த ரிற்கொளு மகமிழி வன்றென்
ஞான சம்பந்த னடித்துணை முடிக்கணி நயப்பாம். (கஅ)

### திருநாவுக்கரசு நாயனார்.

தன்னை யுணரு மவள் வெறுப்பத் தாழ்ந்த வசுர னுய்க்கரந்து
தன்னை யுணரு முணர்வின்றிச் சாம்பர் புரண்ட மால்சமழ்ப்பத்
தன்னை யுணரு மரமகளிர் தாழ்ந்து மகிழ்ந்து புகழ்ந்தேகத்
தன்னை யுணரு நாவரையன் றனை யுணர்வு தங்கிடமாம். (கக)

### சுந்தரமூர்த்திநாயனார்.

அந்தரப் பரவை யாரை யந்தர தத்தாற் றென்றல்
வந்தர வாட்ட நீங்க வந்தர மியத்திற் கூடச்
சந்திர சேகரன்றன் சந்திரவ தனிற் செல்லச்
சுந்தரப் பாடல் செய்த சுந்தரமூர்த்தி போற்றி. (உ0)

---

கஎ. * நந்தி—சிவன். † நந்தி மிகுந்து.

கஅ. கான சம்பு அந்த மாச்செய்—காட்டிலுள்ள நரியை அந்தக் குதிரையாகச்செய்த. வைகானசம் பந்த பாஞ்சராத்திரம்.
ஆன் அசம்.

கக. தன்னை உணரும்—விஷ்ணுவாகிய தன்னை இன்னுனென்றறிந்த.
தன்னை—தன் பெருமையை.
தன்னை—திருநாவுக்கரசரை.
தன் ஐ எனப்பிரிக்க.

உ0. அம் தரப் பரவையாரை. அந்த ரதத்தால்—அந்த ஆசையினுல். தென்றல் வந்து அர—தென்றற் காற்றுகிய சர்ப்பத்தாலுண்டாகும். வந்து அரமியத்திற் கூட. சந்து இரவதனில்.

மாணிக்கவாசகர்.

மாணிக்க வாச கற்கண் டெனுங் கொங்கு வாக்களிப்போன்
மாணிக்க வாச கன்ற வரவிஞ ரங்கொள் வானை
மாணிக்க வாச கந்தா னெனுந்திரு வாச கஞ்சொல்
மாணிக்க வாச கற்கென் மனமது காணிக் கையாம். (உக)

சேக்கிழார்.

தேக்கு சிற்சபை நாதன் றிருவருள்
வாக்கு நல்க மலியச் சிவபத்தி
நோக்கு தொண்டர் புராண நுவன்றருள்
சேக்கிழாரடி சென்னியின் மேற் கொள்வாம். (உஉ)

தோத்திர முற்றிற்று.

---

## எட்டுத் தீர்த்தங்கள்.



§ நந்தி யிலக்குமி சரசுவதிதீர்த்தம் பிரமகுண்ட நவி லுங்கங்கை, வந்தொளிர் சக்கரஞ் சூலஞ் சடாதீர்த்த மிவை யெட்டுங் கரையில் வன்னி, யுந்துவில்வம் புன்னை மகிழ் ஆல் நெல்லி யரசு வில்வ மூறையிஞேங்க, முந்துபுக ழித்தலத்திற் பிர்சித்த முடன் மகிமைமுதிர்வுற் றோங்கும்.

---

உக. மாணிக்கு—பிரமசாரியாகிய ஆதி சைவன் பொருட்டு. அ வாச கற்கண்டு எனும். அரவின் மாணிக்க ஆசு அகன்ற ஆரம். மாண் இக்கு அவா சகம்.

§ நந்தி தீர்த்தம் சந்நிதானத்திலுள்ளது. பிரம குண்டம்—சடா தீர்த்தத்திற்குச் சிறிது நிருதிதிக்கில் உள்ளது. கங்கை—காவேரியே யென்று ஊகிக்க இடந்தருகின்றது. சக்கர தீர்த்தம்—சிவபெருமானுக்கு மேற்றிசையில் உள்ளது. சூலதீர்த்தம்—ஆலயத்திற்குத் தெற்கே காவே ரியிற் கலந்துள்ளது. சடாதீர்த்தம் சிவபெருமானுக்கு ஈசான திசை யிலுள்ளது. இலக்குமி தீர்த்தம், சரசுவதி தீர்த்தம் இன்ன இடத்தில் உள்ளனவென்று தெரியவில்லை.

ஸ்ரீ

# திருவியலூர்ப் புராணம்



சிவமயம்.

## நைமிசாரணியச் சருக்கம்.



பூவுலகத்திலே, புண்ணியத்தலங்கள் பலவற்றுள்ளுஞ் சிறந்து விளங்குவது நைமிசாரணிய மாகும். அது மா, பலா, அடம்பு, கடம்பு, மருது, ஆல், அரசு, அத்தி, இத்தி, வன்னி, கருங்காலி, ஓமை, நுணா முதலிய விருக்ஷங்களும், முல்லை, குருக்கத்தி முதலிய கொடிகளும் அடர்ந்து, தன்பால் வசிப்போர் வெய்யில் வருத்தம் மெய்யில் அறியாத் தன்மையுள்ளது. தவம்புரிந்து பசியான் மெலிந்தோர்க்குக் காய், கனி, கிழங்கு, முதலிய உணவுகளை எப்பொழுதும் எவ்விடத்தும் எளிதிற் கொடுத்து அப்பிணியகற்றித் தண்ணீரமுதால் தாகமுந் தணித்து, அவர்களைச் சற்காரியத்திற் பிரவிர்த்திக்கச் செய்யுந் தகுதிவாய்ந்தது. தவத்துக்கு வேண்டும் தருப்பை சமித்து புஷ்ப முதலிய பலபொருள்களும் எளிதிற் கிடைக்கும் வளமையுற்றது. அப் பெரியோர் அதிகாலையிலெழுந்து நீராடி நித்தியகர்மாநுஷ்டானம், செபம், பாராயணம், பூசை முதலியவற்றை மனம்புறம் போகாமற் குறிக்கண் நிறுத்திச் செய்தற்கேற்ற தனியிடம் பற்பல சார்ந்துள்ளது. பலதுறைப்பட்ட தவமார்க்கத்தில் ஒழுகுவோர்க்கும் அவரவர்க்கு வேண்டும் வசதி வாய்ந்தது. தங்கள் நியதிகளை முடித்த பெரியார் பலர் ஒன்றுகூடி ஒழிவு நேரங்களை வீண்போக்காமல், மன அமைவுடன் வேதம் ஆகமம் ஸ்மிருதி புராணம் இதிகாச முதலியவற்றை ஆராய்ச்சிசெய்து கொண்டிருக்கும் படன சிரவணஸ்தானம் பலசெறிந்துள்ளது. பிரமசரியம் கிருகஸ்தம் வானப்பிரஸ்தம் சந்நியாசம் என்னும் நால்வகை ஆச்சிரமங்களில் நிற்போரும் தத்தம் வருணத்துக்கும் ஆச்சிரமத்துக்கும் விதிக்கப்பட்ட ஆசாரங்களை அநுஷ்டித்துவரும் சிறப்புற்றது. தவம் புரிவோரேயன்றி அவம் புரிவோரும் ஒருகால் நல்லூழான் அணுகப்பெறின் தவம் புரியும் எண்ணம் தானே விளையும் ஸ்தானபலமுடையது. துஷ்டஜந்துக்களாகிய புலி கரடி முதலிய மிருகங்களும் பாம்பு முதலியவைகளும் தத்தம் குரூர இயல்பு மாறித் தவத்தர்களின் சாந்த

இயல்பே வீறும் நலத்தை யுடையது. தன்பால் நடைபெறும் யாகங்களில் அவிப்பாகம் பெறுதற்பொருட்டுப் பிரமன் விட்டுணு இந்திரன் முதலிய தேவர்கள் எப்பொழுதும் போக்குவரவு புரிந்து கொண்டிருக்கப் பெறுவது. தங்கள் தபோமகிமையால் ஆக்கவும் அழிக்கவும் வல்ல முற்றத்துறந்த முனிவர் பலர், எந்த நேரமுஞ், சிந்தையிற் கடவுள், வந்தனைபுரியும், மாண் புடையது. பற்பல சாத்திரம், பலநாளும் பார்த்து, ஊன்றியாராய்ந்து, உள்ளந்தெளியும், விதிவிலக்கெல்லாம், மேதினியிதனிற், கற்றோரன்றிக், கல்லாதவரும், தன்பாலுள்ளோர் நடையால் தாம் வெகு சுலபமாய், அறிந்துகொள்ளும் அற்புத மிக்கது. தேவராயினும், தீமை புரிகுறின், தவத்தின் அவர்செருக்கு, அகற்றும் மகிமையது. வேந்தர் வரினும் விண்ணுலகத்துள, காமதேனுவைக், கடிதின் அழைத்தே, உள்ளங்களிப்ப, ஊட்டி யுபசரிக்கும், தவத்தின் மாட்சி, சாலச் சிறந்தது. தன்பால் வாழ்வோர் தவப்பலனை நாடோறும் குறைத்து முற்றும் அற்றவுடன் கீழ்நிலைச் செலுத்தும் கற்பகவனம் போலாது, தன்பால் வாழ்வோர் தவப்பலனை நாடோறும் வளர்த்து முற்றுதலுற்றவுடன் மேல்நிலைச் செலுத்தும் மேன்மை யுடையது.

இத்துணைச்சிறப்புப் பொருந்திய நைமிசாரணியத்திலே சௌனகர்முதலிய முனிவர்கள் சத்திரயாகஞ் செய்து கொண்டிருந்தார்கள். அப் பொழுது பதினெண் புராணங்களையும் அன்பர்களுக்கு ஆங்காங்கு உபதேசிக்கும் அருந்தவச் சூதமுனிவர் அங்கே வந்தார். சௌனகாதி முனிவர்கள் அவரைக் கண்டவுடன் இருக்கைவிட்டெழுந்து எதிர்கொண்டு சென்று அழைத்து வந்து ஆசனத்திருத்தி வணங்கி, சுவாமீ! காவேரி தீர்த்தவைபவமும் அதன் கரையிலுள்ள புராதன புரமென்னும் திருவியலூரின் வைபவமும் கேட்க விரும்புகின்றோம். அதனைக் கூறியருளவேண்டுமென்று பிரார்த்திக்க; சூதமுனிவர் தேவர்களாலும் அசுரர்களாலும் வழிபடத்தக்க ஸ்ரீபாதங்களையுடைய வராயும், விக்கினமாகிய பருவதத்துக்கு இந்திரன் போன்றவராயும் சர அசரங்களுக்குக் குருவாயும் சமஸ்த இஷ்டசித்திகளையும் கொடுப்பவராயும் உள்ள விநாயகமூர்த்தியையும் பரமான்மாவாயும் பிணிகியாயும் அத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் சிவயோகீசுவரர் என்

னும் சிவலிங்கப்பெருமானையும் தியானித்து வணங்கிக்கொண்டு, முனிவர்களே! கேளுங்கள், புராதனேசுவரரே! வில்வவனேசுவரரே! சிவயோகீசுவரரே என மூன்று திருநாமங்களையும் தினந்தோறும் செபிப்பவனுக்கு மறு ஜன்மம் கிடையாது. நீங்கள் கேட்ட புராதன புரமென்னுந் திருவியலூரின் மகிமை காந்தத்திலே, பிரமாண்டபுராணத்திலே பிருகு நாரத சம்வாதத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. அதிலுள்ளபடி உங்களுக்குச் சொல்லுகிறேன் என்று சொல்லத் தொடங்கினார்.

நைமிசாரணியச் சருக்க முற்றிற்று.

---

## காவேரி தீர்த்த மகிமைச் சருக்கம்.



சௌனகாதி முனிவர்களே கேளுங்கள். காவேரி தீர்த்த மகிமையும் அதன் கரையிலுள்ள புராதன புரமென்னும் திருவியலூரின் மகிமையும் தேவர்களாலும் சொல்ல முடியாது. முற்காலத்தில் இத்தல மகிமையைப் பிருகுமுனிவர் நாரத முனிவருக்குக் கூறியருள, நாரதமுனிவர் தம்மை வேண்டிக்கொண்ட தருமவருமன் என்னும் அரசனுக்குச் சொல்லத் தொடங்கினார்.

அரசனே கேள். எல்லாப் பாவங்களையும் நீக்கத்தக்க காவேரி தீர்த்தமகிமையையும் அதன் கரையிலுள்ள புராதனபுரமென்னும் திருவியலூரின் மகிமையையும் சொல்லுகின்றேன். புராதனபுரத்திலுள்ள காவேரிதீர்த்த சம்பந்தமாய் முன்பு நடந்த ஒரு சரித்திரத்தை இப்பொழுது சொல்லத் தொடங்குகின்றேன்.

முற்காலத்திலே, கேரள தேசத்தில் ஓர் அரசன் இருந்தான். அவன் உலகமுழுதையும் ஆண்டுவந்தான். அவனுக்குக் கணபதியென்னும் புத்திரன் ஒருவன் இருந்தான். அவன் பிராமணர்களையும் தேவர்களையும் நிந்திப்பவன். பிறர் பொருளை அபகரிக்கின்றவன். அந்நியப் பெண்களைக் கூடுவதில் உற்சாகமுள்ளவன். அவன் நித்தியமும் அத்தீச்செயல்களையே மேற்கொண்டு அரச தருமங்களெல்லாவற்றையும் விட்டொழிந்தான். அதை

அவனுடைய பிதா அறிந்து, இவன் இராச்சிய பரிபாலனம் பண்ணத் தகுதி யில்லாதவனென்று நிச்சயித்துப், பட்டணத்திலிருந்து அப்புறப் படுத்திவிட்டான். உடனே அவ்வரச குமாரன் தன் காமக் கிழத்தியோடு அங்கு நின்றும் புறப்பட்டுக், காவேரிக் கரையின் வழியே வந்துகொண்டிருக்கும்பொழுது, திருவிடைமருதூருக்குச் சமீபத்திலுள்ள புராதனபுரமென்னுந் திருவியலூரில் எழுந்தருளியிருக்கின்ற சிவயோகீசுவரருடைய சந்நிதானத்தில் பிரவகிக்கின்ற பெருமை பெற்றதாயும், தன்பால் ஸ்நானஞ் செய்பவர்களுடைய பாவத்தைப் போக்குவதாயும் உள்ள காவேரி தீர்த்தத்தில், துலா (ஐப்பசி) மாசத்தில், உடம்பின் அழுக்கு நீங்குதற்பொருட்டு அவளுடன் ஸ்நானம் பண்ணினன். ஒரு முறை ஸ்நானஞ்செய்த வளவிலேயே, தெய்வப் பெண்கள் சூழ்ந்து சாமரம் வீசவும், சங்கு சக்கரம் கதை முதலியவற்றைத் தரித்த விஷ்ணு பக்தர்கள் துதித்துக்கொண்டுவரவும், அவளோடு வைகுண்ட பதவியை அடைபவனானன். அப்பொழுது அங்குள்ள முனிவர்கள் அதுகண்டு, இவன் காவேரிதீர்த்தத்தில் ஒரு முறை ஸ்நானஞ் செய்த மாத்திரத்திலேயே எல்லாப் பாவங்களும் நீங்கி வைகுண்ட பதவியை அடைந்து விட்டான். இது ஆச்சரியம் ஆச்சரியம் என்று பேசிக்கொள்ள; வைகுண்ட பதவியை அடைதற்பொருட்டுத் தேவவிமானத்தில் ஏறியிருக்கும் அவன் அதைக் கேட்டு அம்முனிவர்களுக்குக் கூறுகின்றான்.

முனிவர்களே! என்னுடைய பூர்வ விருத்தாந்தத்தைக் கேளுங்கள். நான் முற்பிறவியில் ஒரு வைசியன். தருமி என்னும் பெயருடையவன். பண்டிதனும், எப்பொழுதும் பெண்களைக் கூடுதலில் இச்சையுள்ளவனும், மூர்க்கனும், பிறரை நிந்திப்பவனும், சூனியம் வைத்தல் முதலிய கெட்டகாரியங்களைச் செய்பவனும் இருந்தேன். அநேக திரவியங்களைச் சம்பாதித்தேன். அதனால் நான் சுகம் அனுபவிக்கவுமில்லை. பிறருக்கு உபகாரஞ் செய்யவுமில்லை. என்னுடைய பிள்ளைகளுக்கும் வயிறு நிரம்ப ஆகாரங்கொடுத்தால் பணம் செலவாகிவிடுமென்று கருதி உலோபத்தனத்தால் நித்தியமும் பாதியுணவே கொடுத்துவந்தேன்; நானும் வயிற்றுக்குப் போதிய அளவு உண்ணாமல் பாதி ஆகாரமே உண்பவனானேன். இவ்வாறே நூறு வருஷமும் இருந்

ளின் மகிமையும் அங்குள்ள தீர்த்தங்களின் மகிமையும் விரித்துக் கூறவேண்டுமென்று பிரார்த்திக்க; நாரதமுனிவர் சொல்லத் தொடங்கினர்.

அரசனே கேட்பாயாக. திவ்யமான சையகிரியில் நாராயண பருவதம் என்னும் பெயரையுடைய ஒரு க்ஷேத்திரம் இருக்கிறது. அங்குள்ள பக்ஷிகளும் விருக்ஷங்களும் தேவர்களே. அந்த நாராயண பருவதத்தில் நெல்லிமரத்தினடியில் விஷ்ணுமூர்த்தி எப்பொழுதும் வீற்றிருந்து, தம்மை வழிபடுவோர்க்கு நித்தியமும் வரங்கொடுத்தருளுகின்றார். அவருடைய பாதத்தின் பெருவிரலடியிலிருந்து கங்கை பிரவகிக்கின்றது. அது பாவங்களையெல்லாம் நீக்கும் மகிமை வாய்ந்தது. விஷ்ணுபாதத்தில் தோன்றிய காவேரியானது அதிலிருந்து பிரவகிக்கிறது. அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்பவனுக்கு ஏழு சன்மங்களிற் செய்த பாவங்களெல்லாம் நீங்கும். எல்லா யாகபலன்களையும் புண்ணியங்களையும் அடைவான். அதற்கு வடக்கே பாஸ்கரம் என்று ஒரு க்ஷேத்திரம் இருக்கிறது. அது மூன்றுலகங்களினும் பிரசித்தி பெற்றது. அங்கே பரமசிவன் பார்வதிதேவியாரோடு பிரகாசிக்கின்றார். கீழைச்சமுத்திரத்துக்கு மேற்கே முப்பது யோசனைதூரத்தில், சையகிரிக்குக் கிழக்கே ஆதிரங்கம் என்று பெயருள்ள ஒரு க்ஷேத்திரம் இருக்கிறது. அது மிகப் பெருமைவாய்ந்தது. எல்லாத்தேவர்களும் வழிபடத்தகுந்தது. அந்தத் தலத்தில் விஷ்ணுமூர்த்தியானவர் பிரமா முதலிய தேவர்கள் சூழ்ந்து சேவிக்க, அன்பர்களுக்கு அநுக்கிரகஞ் செய்யும் விருப்பமுடையவராய், இலக்குமிதேவியோடு சேஷசயனத்தில் வீற்றிருக்கின்றார். அந்த க்ஷேத்திரம் காவேரியின் நடுவில் இப்பொழுதும் இருக்கிறது. அதன் மகிமை தேவர்களாலும் சொல்லமுடியாது. அந்த ஆதிரங்கத்துக்குக் கிழக்கே பத்துயோசனை தூரத்தில் நாராயணபருவதத்தில் ஒரு க்ஷேத்திரமிருக்கிறது. அது மூன்றுலகங்களிலும் பரிசுத்தமுள்ளது. அங்கே விஷ்ணுமூர்த்தியானவர் எல்லாருக்கும் சுகத்தைத் தருபவராய் இலக்குமிதேவியோடு வீற்றிருக்கின்றார். அதற்குக் கிழக்கே காவேரியின் வடகரையில் வைகுண்டம் என்னும் க்ஷேத்திரம் இருக்கிறது. அங்கே கிருஷ்ணமூர்த்தியானவர் சத்தியபாமை, உருக்குமணி என்னும் மனைவிமார் இருவ

ரோடு மகிழ்ச்சியாய் எழுந்தருளியிருக்கின்றார். அதற்குக் கிழக்கே இரத்தினகிரியில் சிவபெருமான் பார்வதிதேவியாரோடு மகிழ்ந்து நித்தியமும் வீற்றிருக்கின்றார். அதற்குக் கிழக்கே பத்து யோசனை தூரத்தில், காவேரியின் மணற்றிட்டையில் ஸ்ரீரங்கம் என்னும் ஒரு திவ்விய க்ஷேத்திரம் இருக்கிறது. அந்த க்ஷேத்திரத்தில், சந்திரபுஷ்கரணி தீர்த்தக்கரையில், புன்னாகவிருக்ஷத்தினடியில், பிரணவாகாரமான விமானத்தில், விஷ்ணுமூர்த்தியானவர் காவேரியாற் சூழப்பட்டவராயும், எல்லாத்தேவர்களாலும் பூசிக்கப்படுகின்றவராயும், ஸ்ரீரங்கநாதர் என்னும் பெயர் புனைந்து சேஷசயனத்தில் தெற்குமுகமாக வீற்றிருக்கின்றார். அந்த மணல் மேட்டிலேயே, உன்னுடைய இராஜதானியாகிய உறையூருக்குச் சமீபத்தில், நாவல் விருக்ஷத்தினடியில், ஜலமத்தியில் பரமசிவன் பார்வதிதேவியாரோடு பிரகாசிக்கின்றார். காவேரியின் தென்கரையிலுள்ள வேதகிரியென்னும் க்ஷேத்திரத்தில் சிவபெருமான் மாதிருபூதேசுவரர் என்னும் பெயருடன் விநாயகப்பெருமானுக்கு வேண்டிய வரங்களைக் கொடுத்தருளி எப்பொழுதும் வீற்றிருக்கின்றார். அங்கிருந்து மூன்றுயோசனை தூரத்தில் காவேரியின் வடகரையில் ஒரு ஸ்தலம் இருக்கிறது. அது மகாபாதகங்களையும் நீக்கத்தக்கது. காவேரிநதியுஞ்சேர்ந்து ஐந்து நதிகள் பிரவகிக்கின்ற அற்புதம் வாய்ந்தது. அது திருவையாறு என்பதாகும். அங்கே பரமசிவன் பார்வதிதேவியாரோடு வீற்றிருக்கின்றார். அதற்குக் கிழக்கே காவேரியின் தென்கரையில் கும்பகோணமென்னும் க்ஷேத்திரம் இருக்கிறது. அங்கே பிரசித்தி பெற்ற சக்கரதீர்த்தக் கரையில் காவேரிக்கு மிகச் சமீபத்தில் விஷ்ணுமூர்த்தியானவர் சக்கரபாணியென்னும் பெயருடன் பிரகாசிக்கின்றார். அதற்குச் சமீபத்தில் பொற்றாமரைத் தடாகக் கரையில் விஷ்ணுமூர்த்தியானவர் சாரங்கபாணி யென்னும் பெயருடன் இலக்குமிதேவியோடு சேஷசயனத்தில் விளங்குகின்றார். அதற்கு மேற்கே பிரளயகாலத்தில் அமுதகும்பத்திற்றோன்றிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்றார். அதற்குக் கிழக்கே அரையோசனை தூரத்தில் திருவிடைமருதூர் என்னும் திவ்விய க்ஷேத்திரம் இருக்கிறது. அந்த க்ஷேத்திரத்தில் பரமசிவனை நோக்கிப் பார்வதிதேவியார் தவஞ் செய்தருள; சிவபெருமான் பிரசன்னராகி விஷ்ணுமூர்த்தி முன்னிலையில் பார்வ

தியாரைத் திருமணஞ் செய்துகொண்டார். அதற்கு வடக்கே வில்வவிருக்ஷத்தினடியில் விஷ்ணுமூர்த்தியானவர் சத்தியபாமை உருக்குமணியென்னும் இரு மனைவியருடன் வீற்றிருக்கின்றார். அந்த ஸ்தலத்தின் வைபவத்தை நான் என்னென்று சொல்லுவேன்.

அந்த க்ஷேத்திரத்திற்கு வாயுமூலையில் காவேரியின் வடகரையில் வில்வவனத்தில் புராதனபுரம் என்று ஒரு தலமிருக்கிறது. அதன் மத்தியில் சிவபெருமான் சிவயோகீசுவரர் என்னும் பெயர்கொண்டு, பிரமன், விஷ்ணு, இந்திரன் முதலிய தேவர்கள் சேவிக்க, சமஸ்த தேவர்களோடும் மகிழ்ந்து வீற்றிருக்கின்றார். அந்தத் தலத்தில் பெண்கொலைப்பழி நீங்கியிருக்கிறது. அத்தலம் எல்லாப் பாவங்களையும் நீக்கத்தக்கது; மந்திர சித்திகளைக் கொடுப்பதாயும் க்ஷேத்திரங்களுக்குள் உயர்ந்ததாயும், தருமம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்னும் நால்வகைப் புருஷார்த்தங்களையும் கொடுப்பதாயும் உள்ளது.

காவேரிக்கரைத் தலவிவரணச்சருக்க முற்றிற்று.

## பெண் கொலைப்பழி நீங்கு சருக்கம்.

அதுகேட்ட தருமவருமன் என்னும் அரசன் மேலும் அத்தலமகிமையைக் கேட்க விருப்பமுற்று, நாரத முனிவரை நோக்கி, சுவாமீ! சிவயோகீசுவரர் வீற்றிருக்கின்ற அந்தத்தலத்தின் மகிமையை அடியேன்பாற் கிருபை கூர்ந்து இன்னும் விரித்துச்சொல்லியருள வேண்டுமென்று பிரார்த்திக்க, நாரதமுனிவர் அரசனே! நீ வினவியது நன்று. அந்தத்தலமகிமை முழுதும் உனக்கு நான் சொல்லுகிறேன். கவனித்துக் கேட்பாயாக என்று சொல்லத் தொடங்கினார்.

ஓர் அரசன் தீர்த்தயாத்திரை செய்பவனாய்ச் சிவநாமோச்சாரணம் பண்ணிக்கொண்டு திருவியலூருக்கு வந்து, அங்குள்ள தேவசர்மா என்னும் முனிவரைத் தரிசித்து, நமஸ்கரித்துச் சுவாமீ! என்னைக்காத்தருளல் வேண்டும் என்று பிரார்த்தித்து

நின்றான். அம்முனிவர் அவனைப் பார்த்தவளவில் அவனுடைய பாவமிகுதியை மனத்துட்கொண்டு இரக்கத்தால் வருத்தமுற்று மௌனமாயிருந்தார். அப்பொழுது பக்கத்திலுள்ள முனிவர்கள் அவருடைய முகக்குறிப்பையறிந்து, அம்முனிவரை நோக்கி, சுவாமீ! இவ்வரசனுடைய பிரார்த்தனையைக் கேட்டும் ஒன்றும் விடைகூறாமல் மௌனமாயிருப்பது என்ன காரணம்? சொல்லியருளவேண்டும் என்று பிரார்த்திக்க, அம்முனிவர் சொல்லத் தொடங்கினார்.

முனிவர்களே! இவனுடைய விருத்தாந்தத்தைக் கேளுங்கள். முன்பு இவன் கோகுலமென்னும் பட்டணத்திலிருந்து பூமியை அரசாண்டு வந்தான். அப்பொழுது பூருவகன்மபாகத்தினால் இவனுக்குப் பெண் கொலைப்பழி வந்துசேர்ந்தது. அந்தப் பாவம் நீங்குதற்பொருட்டு இவன் காசிக்குப்போய் நாடோறும் கங்காநதியில் மூன்று காலமும் ஸ்நானஞ் செய்து சிவபூஜை பண்ணிக்கொண்டு பதினைந்து வருஷம்வரை அந்தத் தலத்தை விட்டு நீங்காமல் இருந்தான். இருந்தும் அந்தப் பாவம் விட்டு நீங்காமையால் இவன் மிகத்துன்பமடைந்தான். அது கண்டு அங்குள்ள முனிவர்கள் அரசனே! நீ இவ்விடத்திலேயேயிருந்து கங்காஸ்நானமாத்திரம் பண்ணிக்கொண்டிருந்தால் போதாது. சரீரவருத்தந்தோன்றப் பல தீர்த்தங்களுக்குஞ் சென்று ஸ்நானஞ் செய்தலாகிய தீர்த்த யாத்திரை பண்ணவேண்டும். அப்படிச் செய்யாவிடில் உன்னைப்பிடித்த பெண் கொலைப்பழி நீங்கமாட்டாதென்று கூற; அது கேட்ட இவ்வரசன் அங்கு நின்றும் புறப்பட்டு, கேதாரம், நைமிசாரணியம், பதரிவனம், அயோத்தி, துவாரகை, மாயா, கோகுல பருவதம், கங்காசங்கமம், சிங்கிரி, பிங்களபர்வதம், சகநாதம், மகாகூடம், பத்திராசலம், வேங்கடாசலம் (திருப்பதி), காஞ்சீபுரம், திருவண்ணாமலை, ஸ்ரீமுஷ்ணம், சிதம்பரம், திருவெண்காடு, சங்கமுகம் காவேரி, மாயூரம், வைத்தீசுவரன்கோவில், சம்பகாரணிய முதலிய க்ஷேத்திரங்களுக்குப்போய் அங்குள்ள தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்து, அதனை உள்ளும் பருகிச் சுவாமிதரிசனஞ் செய்துகொண்டுவந்தும் அந்தப் பாவம் நீங்கப் பெறாமல், திருவிடைமருதூரையடைந்து காவேரியிலும் காருண்யாமிருததீர்த்தத்திலும் ஸ்நானஞ் செய்து,

அத்தீர்த்தத்தை உள்ளும் பருகி, மருதவிருக்ஷத்தினடியில் எழுந்தருளியிருப்பவராயும், பார்வதி நாயகராயும், தேவதேவராயும், உலகநாதராயும் உள்ள ஸ்ரீ மருதீசரை இடைவிடாமல் நமஸ்கரித்துத் தோத்திரஞ் செய்து கொண்டிருந்தும் இவனுக்கு அப்பெண் கொலைப்பழி நீங்கவில்லை. சிலகாலஞ் சென்றபின் கருணாநிதியாகிய ஸ்ரீமருதீசர் இவன் துதிக்கு மகிழ்ந்து திருவுளமிரங்கி, வயோதிகப் பிராமணத் திருமேனிகொண்டு எழுந்தருளிவர, அவரை இவ்வரசன் பார்த்துச் சிவனைகப்பாவித்துத் தோத்திரஞ் செய்து தண்டாகாரமாய்ப் பூமியில் விழுந்து நமஸ்காரம் பண்ணியபடியே கிடந்தான். அவ்வாறு கிடக்கின்ற இவனைப் பிராமணராகிய சிவபெருமான் பார்த்து, அரசனே! எழுந்திரு எழுந்திரு. உனக்கு நன்மையுண்டாகக் கடவது. காவேரியின் வடகரையில் வில்வாரணியம் என்று ஒரு க்ஷேத்திரம் இருக்கிறது. எவனொருவன் அங்குள்ள சடாதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து அத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் சிவயோகீசுவரரை ஒருமுறை தரிசனஞ் செய்கின்றானோ அவனுக்கு எல்லாப் பாவங்களும் நீங்கும். சத்தியம் சத்தியமாகச் சொல்லுகிறேன் என்று அநுக்கிரகஞ்செய்ய; அது கேட்ட அரசன் இங்கு வந்து நம்மையடைந்திருக்கின்றான் என்று சொன்னார்.

அவற்றையெல்லாம் கேட்ட முனிவர்கள், அரசன்பால் தயை கூர்ந்து, தேவசர்மாவை நோக்கி, சுவாமீ! இவனுக்குக் கிருபாநோக்கஞ் செய்யவேண்டுமென்று பிரார்த்திக்க; அம்முனிவர் அரசனை நோக்கி, அரசே! நீ இத்தலத்தில் சிவயோகீசுவரருடைய சந்நிதானத்திலுள்ள காவேரியோடு கலந்துள்ளதாய், எல்லாப் பாவங்களையும் நீக்கத் தக்க சூலதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து, சிவபெருமானைத் தரிசனம்பண்ணி மூன்று பிரதக்ஷிணம் வந்தால் உன்னைத் தொடர்ந்த பெண்கொலைப்பாவம் உடனே நீங்கிவிடும் என்று கூறியருள; அது கேட்ட அரசன் அங்கு நின்றும் வந்து, காவேரியிலுள்ள சூலதீர்த்தமென்னும் கட்டத்தில் அரசமரத்தினடியில் ஸ்நானஞ்செய்து தன்னைப் பிடித்த பாவ நிவாரணத்தின் பொருட்டுத் தர்ப்பணம் பண்ணிப், பிராமணர்களுக்குத் திரவியம், யானை, குதிரை, தேர், பசு, இடபம் ஆகியவற்றைத் தானங்கொடுத்துச் சிவபெருமானுக்கு ஈசான

பாகத்திலுள்ள சடாதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து மறுபடியும் தர்ப்பணம் பண்ணி, சிவயோகீசுவரருடைய சந்நிதியை அடைந்து நமஸ்காரம் பண்ணித் தோத்திரஞ் செய்யத் தொடங்கினான்.

தேவ தேவேசரே! உமக்கு நமஸ்காரம். உலகாநுக்கிரக காரணரே! உமக்கு நமஸ்காரம். நிர்க்குணமூர்த்தியாயிருந்தும் அன்பர்களுக்கு அநுக்கிரகஞ் செய்தற் பொருட்டுச் சகுணமூர்த்தியாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். சிருஷ்டி, திதி, சங்காரம் என்னும் மூன்று தொழிலுக்குங் காரணமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். ஆதிமூலமாயும், தேவராயும், உலகங்களுக்கும் உலகங்களைத் தோற்றுவிக்கும் மாயைக்குங் காரணமாயும் உள்ளவரே! உமக்கு நமஸ்காரம். உலகங்களைப் படைத்தற்பொருட்டுப் பிரமதேவனையும், காத்தற்பொருட்டு விஷ்ணுமூர்த்தியையும், அழித்தற்பொருட்டு உருத்திரமூர்த்தியையும், சத்துவம், ரசசு, தமசு என்னும் முக்குணங்களினின்றும் தோற்றியருளி, சரம், அசரம் என்னும் இருவகையாகிய உலகமுழுதையும் படைத்தும், காத்தும், அழித்தும் வருகின்றவரே! உமக்கு நமஸ்காரம் என்று துதித்து, அரசன் தண்டாகாரமாய்ப் பூமியில் விழுந்து நமஸ்கரித்து உரத்த சத்தத்தால் அடியேனைக் காத்தருளும் காத்தருளும் என்று கதறினான்.

கிருபாநிதியாகிய சிவபெருமான் அவனுடைய துதிக்குத் திருவுளமகிழ்ந்து, பிறைச்சந்திரனால் அலங்கரிக்கப்பட்ட சடையுடையவராயும், சந்திரன்போன்ற திருமுகமண்டலமுடையவராயும், விரூபாக்ஷராயும், காளகண்டராயும், கன்னப் பிரதேசத்தில் பொருந்துகின்ற இரத்தினகுண்டலத்தால் அலங்கரிக்கப்பட்டவராயும், சூலாயுதமேந்திய நீண்ட திருக்கரமுடையவராயும், மந்தாரமாலை பிரகாசிக்கின்ற விசாலமான மார்புடைய்வராயும் மூன்று மடிப்புப்பொருந்திய வயிறும், ஆழமான நாபியும் உடையவராயும், புலித்தோலை வஸ்திரமாக உடுத்தவராயும், இடத் தொடையின்மேல் வீற்றிருக்கும் பார்வதி தேவியாரை ஆலிங்கனஞ் செய்துகொண்டிருப்பதில் விருப்பமுள்ளவராயும், இந்திர நீலரத்தினத் தூண்போன்ற இரண்டு தொடைகளையுடையவராயும், மன்மதனுடைய அம்பறாத் தூணியையொத்த இரண்டு

கணைக்கால்களையுடையவராயும், கொடி, வச்சிரம், அங்குசம், தாமரை என்னும் இரேகைகள் பிரகாசிக்கின்ற பாததாமரைகளை யுடையவராயும் இடபவாகனத்தின்மேல் எழுந்தருளிவந்து, அரசனே! எழுந்திரு. எழுந்திரு. உன்னைப் பீடித்த கொலைப்பாவம் நமது தரிசனமுதலியவற்றால் நீங்கிவிட்டது. பயப்படவேண்டாம். உனக்கு நன்மையுண்டாகக்கடவது என்றருளிச்செய்ய, அதுகேட்ட அரசன் பரமானந்த மேலீட்டால் சிவபெருமானைத் தரிசித்துக்கொண்டு பக்கத்திலேயே நின்றான். ஆகாயத்திலிருந்து கற்பகப் பூமழை பொழிந்தது. தேவகணங்களெல்லாம் தோத்திரம் பண்ணினவர்களாய், சாஸ்திரங்களில் பிரமகத்திமுதலிய பாவங்களுக்கெல்லாம் பிராயச்சித்தம் விதிக்கப்பட்டுள்ளது. ஸ்திரீகத்திக்குப் பிராயச்சித்தம் விதிக்கப்படவில்லை. அப்படியிருந்தும் இந்தத்தலத்தில் இவனுக்குப் பெண்கொலைப்பாவம் நீங்கியது ஆச்சரியம் என்று பேசிக்கொண்டார்கள்.

பெண்கொலைப் பழிநீங்கு சருக்க முற்றிற்று.

---

## தேவர்கள் தோத்திரச் சருக்கம்.

அது கேட்ட தருமவருமன் என்னும் அரசன், இன்னும் சிவயோகீசுவரருடைய மகிமையைச் சொல்லவேண்டுமென்று பிரார்த்திக்க, நாரதமுனிவர் சொல்லத்தொடங்கினார்.

அரசனே கேள். அந்தப் பெண்கொலைப்பழியானது சிவயோகீசுவரருடைய தரிசனத்தால் தன்னுடைய குரூர ரூபம் நீங்கித், தேவரூபம்பெற்றது, உயர்ந்த இரத்தினமாலை மார்பில் விளங்கத் தேவவிமானத்தில் ஏறி ஆகாயத்தில் நின்றுகொண்டு, சிவயோகீசுவரரை நோக்கித் தன் விருத்தாந்தத்தைக் கூறத்தொடங்கிற்று.

தேவாதிதேவரே உமக்கு நமஸ்காரம். நான் தேவரீருடைய திருவடிகளைத் தரிசிக்கப்பெற்றமையால் குரூரமான ஹத்திரூபம் நீங்கித் திவ்யரூபமடைந்திருக்கின்றேன். முற்பிறவியில்

நான் ஒரு பிராமணப்பெண். சுநாசை என்னும் பெயருள்ளவள். என்னுடைய நாயகன் சுமேதன் என்னும் பெயருள்ளவன். அவன் சமஸ்த சாஸ்திரங்களிலும் சமர்த்தன். நான் அவனுக்குத் தினந் தோறும் பணிவிடை செய்துகொண்டு வீட்டிலிருந்தேன். அப் பொழுது அவ்வூரில் ஒரு வியபிசாரி. எல்லாப் பாவங்களும் செய் பவள். அவள் என்னுடைய மனசை மயக்கி என் கற்பு நிலையை யும் அழித்தாள். அதனால் நான் என்னுடைய நாயகனைவிட்டு வேறொரு பிராமணனைச்சேர்ந்து சுகித்துவந்தேன். அவன் எப் பொழுதும் ராம ராம என்று பஜனை பண்ணுகின்றவன். அதைக் கேட்டு நானும் ராம ராம என்று பஜனை பண்ணுகின்றவளாய் அவனோடு நெடுநாட் கூடியிருந்தேன். பின்பு இருவரும் மரண மடைந்தோம்.

நான் ராம நாமத்தை உச்சரித்த புண்ணியத்தால் மறு ஜன்மத்தில் அரசனுக்கு மனைவியாகும் பாக்கியத்தைப் பெற் றேன். அவ்வரசனுக்கு என்னையல்லாமல் வேறு மனைவியரும் உண்டு. அவர்களுள் ஒரு மனைவிபாற் பிறந்த புத்திரன் ஒருவன் இருந்தான். அவன் வேதவேதாங்கங்களின் உண்மையை அறிந் தவன். சர்வ சாஸ்திரங்களிலும் சமர்த்தன். அடக்கமுள்ள வன். பிதாவினிடத்து அன்புள்ளவன். அப்பிதாவின் சொற் படியே நடப்பவன். பெற்ற தாய்போல மற்றைத் தாய்மார்களுக் கும் பணிவிடைசெய்வதில் விருப்பமுள்ளவன். திவ்ய ரூபன். வாலிபன். அவனும் நானும் கூடி இன்பமநுபவிக்கிறோமென்று அரசனுடைய மனைவிமாருள் ஒருத்தியாகிய துன்முகி என்பவள் கற்புநிலைபிற்சிறந்த என்னைக் குறித்து அரசனிடம் பொய்வார்த் தை சொன்னாள்.

அரசன் அவள் வார்த்தையை நம்பி மனவருத்தமுற்றுக், கோபத்தாற் கண்கள் சிவந்து, புத்திரனைக் கூப்பிட்டு, அடா! நீ தாயிடத்தில் இன்பம் அநுபவிக்கலாமா? என்று கேட்டான். அது கேட்ட அரச குமாரன் மனந்திடுக்கிட்டுச் சிவ சிவ என்று கூறி, இரண்டு காதுகளையும் கைகளாற் பொத்திக்கொண்டு கீழே விழுந்து மூர்ச்சித்தான். உடனே அரசன் என்னைக் கூப்பிட்டுக் கூரிய வாளாயுதத்தால் வெட்டிவிட்டான். அந்தக் கொலைப் பாவமானது குரூரமான இராக்ஷசப் பெண்வடிவாய், அவன்

முன்னே நின்று அவனுடைய தேகத்தைப் பார்ப்பதற்கு ஆசையுள்ளதாய், அவனுக்குப் பயத்தைச்செய்வதாய், நித்தியமும் அவனைப் பிடித்துக்கொண்டிருந்தது. பிறகு அவ்வரசன் புத்திரனையுங் கொல்லவேண்டுமென்று நினைத்தான். அப்பொழுது அரசனே! உன் புத்திரனிடத்தில் குற்றம் இல்லை. உன் நாயகியினிடத்திலும் எவ்வகையாலும் வியபிசாரித்தனம் இல்லை. நீ ஏன் அவளைக் கொன்றாய்? அதற்குப் பரிகாரமில்லையென்று ஓர் அசரீரிவாக்கு எழுந்தது. அது கேட்ட அரசன் அஞ்சி உடனே புத்திரனிடத்தில் இராச்சியத்தை ஒப்புவித்துப், பழிகூறிய துன்முகியென்பவளை விலக்கிவிட்டு பட்டமனைவியுடன் தீர்த்தயாத்திரைசெய்துகொண்டு வந்தான். செய்துங் கொலைப்பழி நீங்கவில்லை. சுவாமீ! தேவரீருடைய தரிசனமாத்திரத்தாலேயே அரசனைப்பிடித்த ஹத்திரூபம் நீங்கி நான் திவ்யரூபம் பெற்றேன். தேவரீருடைய மகிமை தேவர்களாலும் சொல்ல முடியாது. இனி நான் நெடுநாள் சுவர்க்கத்திலிருந்து பின்பு மனுஷஜன்மத்தையடைவேன். இவ்வரசனும் என்னோடு சுவர்க்கத்தில் இன்பமநுபவித்துக்கொண்டிருந்து பின்பு பூலோகத்தில் நந்தனுக்குப் புத்திரனாகவந்து பிறப்பான். அப்போது நான் இவனை நாயகனாக அடைந்து புத்திர பௌத்திரர்களோடு வாழ்ந்திருந்து இவனோடு தேவரீருடைய திருவடிகளையடையவேண்டும் என்று பிரார்த்தித்துச் சிவபெருமானை அநேக தோத்திரங்களால் துதித்துப் பலமுறை நமஸ்கரித்து வரம்வேண்டி நிற்கச், சிவபெருமான் அவள்பாற் கிருபைகூர்ந்து வேண்டியவரங்களைக் கொடுத்துப், பிரளயகாலத்தில் உனக்கு முத்திகொடுக்கின்றோமென்று அருளிச்செய்ய, அவளும் உடனே சுவர்க்கலோகத்தையடைந்தாள். அவ்வற்புதத்தைப் பார்த்த பிரமன், விஷ்ணு, உருத்திரன், இந்திரன் முதலிய தேவர்களும் முனிவர்களும் ஸ்ரீசிவயோகீசுவரரைத் தரிசித்துத் துதிக்கத் தொடங்கினார்கள்.

தேவ தேவேசரே! உமக்கு நமஸ்காரம். கிருபாநிதியே! உமக்கு நமஸ்காரம். எல்லா ஆன்மாக்களுக்கும் போகமோக்ஷங்களைக் கொடுப்பவரே! உமக்கு நமஸ்காரம். எல்லா உலகங்களையும் படைத்தற்கும், காத்தற்கும், அழித்தற்குங் காரணமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். பிறவிக்கு அஞ்சித் தன்னை வந்த

டைந்தவர்களுக்கு அப்பயத்தை நீக்குகின்றவரே! உமக்கு நமஸ்காரம். வேத வேதாந்தங்களாலும் தேவ சிரேஷ்டர்களாலும் பூசிக்கப்பட்டவரே! உமக்கு நமஸ்காரம். சூலமும் கட்கமும் பொருந்திய திருக்கரத்தையுடையவரே! உமக்கு நமஸ்காரம். உலகங்களுக்கெல்லாம் நாதரே! உமக்கு நமஸ்காரம். அவற்றிற்குப் பிறப்பிடமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். நீலகண்டரே! உமக்கு நமஸ்காரம். ஆகாயத்தில் வசிப்பவரே! உமக்கு நமஸ்காரம். சூரியன், சந்திரன், அக்கினி, ஜலம், பூமி, வாயு, ஆகாசம், எஜமானன் என்னும் அஷ்டமூர்த்திசொரூபமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். சத்திய ரூபமாயும், அசத்திய ரூபமாயும் (சத்தியத்தைத் தருமமாகக்கொள்ளாதவராயும்) உள்ளவரே! உமக்கு நமஸ்காரம். ஞான ரூபமாயும், அஞ்ஞான ரூபமாயும் (ஞானத்தைத் தருமமாகக்கொள்ளாதவராயும்) உள்ளவரே! உமக்கு நமஸ்காரம். சுக ரூபமாயும் அசுக ரூபமாயும் (சுகத்தைத் தருமமாகக்கொள்ளாதவராயும்) உள்ளவரே! உமக்கு நமஸ்காரம். ஜீவ ரூபமாயும் அஜீவ ரூபமாயும் (ஜீவத்தன்மை என்னும் தருமமில்லாதவராயும்) உள்ளவரே! உமக்கு நமஸ்காரம். வியக்த ரூபமாயும், அவ்வியக்த ரூபமாயும் உள்ளவரே! உமக்கு நமஸ்காரம். சப்த ரூபமாயும், அசப்த ரூபமாயும் (சப்தமென்னும் தருமம் அற்றவராயும்) உள்ளவரே! உமக்கு நமஸ்காரம். ஸ்பரிச ரூபமாயும், அஸ்பரிச ரூபமாயும் (பரிசமென்னும் தருமம் அற்றவராயும்) உள்ளவரே! உமக்கு நமஸ்காரம். ரூப ரூபமாயும் அரூப ரூபமாயும் (ரூபமென்னும் தருமம் அற்றவராயும்) உள்ளவரே! உமக்கு நமஸ்காரம். ரச ரூபமாயும், அரச ரூபமாயும் (ரசமென்னும் குணமற்றவராயும்) உள்ளவரே! உமக்கு நமஸ்காரம். கந்த ரூபமாயும், அகந்த ரூபமாயும் (கந்தமென்னும் குணமற்றவராயும்) உள்ளவரே! உமக்கு நமஸ்காரம். தேக ரூபமாயும், தேகமற்றவராயும் உள்ளவரே! உமக்கு நமஸ்காரம். பிராணவாயு ரூபமாயும், பிராணவாயு அற்றவராயும் உள்ளவரே! உமக்கு நமஸ்காரம். சுரோத்திர ரூபமாயும், சுரோத்திரேந்திரியம் அற்றவராயும் உள்ளவரே! உமக்கு நமஸ்காரம். துவக்கு ரூபமாயும், துவக்கிந்திரிய மற்றவராயும் உள்ளவரே! உமக்கு நமஸ்காரம். லிங்க ரூபமாயும், லிங்கரூப மற்றவராயும் உள்ளவரே! உமக்கு நமஸ்காரம். பாயு ரூபமாயும், பாயுவிந்திரியமற்றவராயும் உள்ள

வரே! உமக்கு நமஸ்காரம். சித்தரூபமாயும், சித்தமற்றவராயும் உள்ளவரே! உமக்கு நமஸ்காரம். மாதா ரூபமாயும், மாதா அற்றவராயும் உள்ளவரே! உமக்கு நமஸ்காரம். மான ரூபமாயும், மானமற்றவராயும் உள்ளவரே! உமக்கு நமஸ்காரம். அளவிடத்தக்க உருவமுடையவராயும், அளவிடத்தகாத உருவமுடையவராயும் உள்ளவரே! உமக்கு நமஸ்காரம். மதிரூபமாயும் மதியற்றவராயும் (மதியென்னும் குணமற்றவராயும்) உள்ளவரே! உமக்கு நமஸ்காரம். எல்லாமாயும் எல்லாம் அல்லாதவராயும் உள்ளவரே! உமக்கு நமஸ்காரம். மகாதேவரே! அடியார்களின் மனத்தில் இருப்பவரே! பிரம, விஷ்ணு, ருத்திரசொரூபமாயுள்ளவரே! கிருபாநிதியே! எங்களைக் காத்தருளும் காத்தருளும் என்று பிரமன் முதலிய தேவர்களும் முனிவர்களும் தோத்திரஞ் செய்து தண்டாகாரமாய்ப் பூமியில் விழுந்து நமஸ்கரித்து அன்புடன் நின்றார்கள்.

தேவதேவராயும், மகாதேவராயும் எல்லா ஆன்மாக்களுக்கும் இன்பத்தைக் கொடுக்க விருப்பமுள்ளவராயும் பார்வதிசமேதராயும் உள்ள சிவபெருமான் அவர்கள் கூறிய தோத்திரங்களைக் கேட்டு மனமகிழ்ந்து கிருபை செய்து அவர்களை நோக்கி, நீங்கள் உங்களுக்கு வேண்டிய வரங்களைக் கேளுங்கள் தருகிறேனென்று கூறியருள; அவர்கள் நமஸ்கரித்து, சுவாமீ! தேவரீர் எங்களுக்கு வரத்தைக் கொடுப்பவரானால், நாங்கள் வரம் பெற்றுக்கொள்வதற்குத் தகுதியுள்ளவர்களானால், பூலோகத்திலுள்ள எல்லாத் தீர்த்தங்களும் இந்தத்தலத்தில் எப்பொழுதும் வசிக்கவேண்டும். தேவரீர் பார்வதிதேவியாரோடு மகிழ்ந்து எப்பொழுதும் இங்கே எழுந்தருளியிருத்தல் வேண்டும் என்று பிரார்த்திக்க; சிவபெருமான் அவ்வரங்களைக் கொடுத்து, அவர்களை நோக்கி, நீங்கள் இந்தத் தலத்தில் எப்பொழுதும் நம்மோடிருக்கக் கடவீர்கள் என்று ஆஞ்ஞாபித்தருளி, தமக்கு ஆக்கினேயத்தில் விஷ்ணுமூர்த்தியானவர் இலக்குமிதேவி சமேதராய் விஷுவக்சேனர் முதலானவர்களோடு வீற்றிருக்கவும், கீழ்த்திசையில் பிரமதேவர் சரசுவதிதேவியோடு வீற்றிருக்கவுஞ்செய்து மேலும் அவர்கள் விரும்பிய வரங்களைக் கொடுத்து இலிங்கத்தில் மறைந்தருளினார். ஆதலால் இந்த க்ஷேத்திரம் உலகங்களிற் பிரசித்திபெற்றது. பாவங்

களையெல்லாம் நீக்கத்தக்கது. இந்தத்தல மகிமையும் இங்குள்ள தீர்த்தங்களின் மகிமையும் கற்பகோடிகாலமானாலும் பிரமாவினாற் சொல்லமுடியாது. இது பிரசித்திபெற்ற எட்டுத் தீர்த்தங்களை யும் எட்டு விருக்ஷங்களையும் உடையது. இங்கு வசிக்கும் கிருமி கீடம் பக்ஷிமுதலானவைகளும் தேகம் நீங்கியபின் தேவர்களாற் பூசிக்கப்படுகின்றன. காசியில் இறக்கும் பிராணிகளுடைய வலது காதில் சிவபெருமான் உமாதேவியாரோடு தாரகப்பிரம மந்தி ரோபதேசம் பண்ணி மோக்ஷங்கொடுத்தருளுகின்றார். ஆனால் காசியில் இறப்பவர்களை அங்கு வீற்றிருக்கின்ற காலவைரவக்கட வுள் சூலத்தில் வைத்துச் சுழற்றி அவர்களுடைய பாவத்தைத் தொலைத்தபின்பே சிவபெருமான் பார்வதிதேவியாரோடு அவர்க ளுடைய வலதுகாதில் தாரகப்பிரம மந்திரோபதேசம் பண்ணி, முத்திகொடுத்தருளுவர். இந்த க்ஷேத்திரத்தில் இறப்பவர்களு க்கு காலவைரவ சூலத்தில் சுழலும் கஷ்டமில்லாமலே சிவபெரு மான் பார்வதி தேவியாரோடு தாரகப்பிரம மந்திரோபதேசம் பண்ணி முத்திகொடுத்தருளுவர். ஆதலால் இந்த க்ஷேத்திரம் காசியிலும் உயர்ந்ததாகும்.

தேவர்கள் தோத்திரச் சருக்க முற்றிற்று.

---

## நந்திவிசயச் சருக்கம்.

அதுகேட்ட தருமவருமன் என்னும் அரசன் சிவயோ கீசுவரருடைய மகிமையைக் கேட்பதில் அவா மிகுந்தவனாய் இன்னும் சொல்லவேண்டுமென்று கேட்க; நாரத முனிவர் சொல் லத்தொடங்கினர்.

அரசனே கேள். இந்த க்ஷேத்திரத்தில் பிராமணன் ஒருவன் இருந்தான். அவன் தன் குலத்துக்குரிய எல்லாத்தரு மங்களுக்கும் அதிகாரமற்றவன். பால், தயிர், நெய், அன்னமுத லியவற்றை விற்றுச்சீவனஞ்செய்பவன். சந்தியாவந்தனத்தையும் விட்டு மூன்றுநேரமும் புசிப்பவன். பிராமணர், தேவர், குரு

என்னும் மூவரையும் வழிபடாமல் நிந்திப்பவன். தாசிகளுக்குப் பொருள் கொடுத்து அவர்களைப்போஷித்து வருவதிற் கருத்துள்ளவன். அவன் வியாபாரத்தால் அநேக திரவியங்களைச் சம்பாதித்துக்கொண்டு இவ்வாறு இருக்குங்காலத்தில், ஒருநாள் ஓர் பிராமணன் வந்து தன் கடையில் அரிசிப் பிச்சை யாசிக்க, அவனைப்படியால் அடித்தான். அந்த அடி சிரத்திற்பட்டமையால் அவன் மூர்ச்சித்துக் கடைவீதியிலேயே விழுந்து இறந்தான். அது கண்ட அவ்வியாபாரப் பிராமணன் மீண்டுங் கோபங் கொண்டு அவனைக்காலால் உதைத்துக் கயிற்ருல் கட்டி வீதியின்வழியே இழுத்துச் சென்று பட்டணத்துக்கு வெளியே கொண்டுபோய்ப் போட்டான். இந்தப்படியே அவன் கெட்ட காரியங்கள் பலவற்றைச் செய்து வந்தான். சம்பாதித்த திரவியத்தால் தான் சுகமநுபவிக்கவுமில்லை. பிறருக்குக் கொடுத்து உபகரிக்கவுமில்லை. அப்படியிருந்தும் அவன் இறக்குந்தருணத்தில் சிவநாமங்களை உச்சரித்த சிவபுண்ணியத்தால் மோட்சமடைந்தான். சிவநாமத்தை ஒருவன் உச்சரித்தால் பிரமகத்தி முதலிய மகாபாதகங்களும் நீங்கும். சிவநாமத்தை உச்சரிப்பவனுடைய வைபவம் சொல்ல முடியாது. அந்த வியாபாரப் பிராமணன் மரணமடைந்தவுடன் இந்த ஸ்தலத்தின் விசேஷத்தாலும் சிவநாமோச்சாரண மகிமையாலும் தேவரூபம் பெற்று, இரத்திநாபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட தேவர்கள் சூழ்ந்து சாமரம் வீசவும், சிவகணங்கள் வழிபாடு செய்யவும் விமானத்தில் ஏறிக்கொண்டு ஆகாயமார்க்கமாய்ச் சென்ருன். அவனைப் பார்த்து அங்குள்ள முனிவர்கள் இவன் அநேக பாவங்களைச் செய்திருந்தும் அவையெல்லாம் நீங்கிச் சிவரூபம் பெற்றுப் புண்ணியலோகங்களை அடையப்போகின்ருன். இது ஆச்சரியம் ஆச்சரியம் என்று பேசிக் கொள்ள; அதைக்கேட்டு, ஆகாயவிமானத்திலிருக்கும் பிராமணன் சொல்லத்தொடங்கினன்.

முனிவர்களே ! கேளுங்கள். நான் பூருவஜன்மத்தில் நந்தனபுரம் என்னும் பட்டணத்தில் வைசியகுலத்திற் பிறந்தேன். அப்போது என் பெயர் வீரன். நான் லவணம் (உப்பு) எண்ணெய் முதலிய ரசபதார்த்தங்களை விற்று வெகுகாலம் சீவனஞ் செய்து வந்தேன். என்னுடைய அந்தியகாலத்தில் ஒரு பிரா

மணர் என்னிடம் வந்தார். அவர் சிவயோகி. பெருந்தவஞ் செய்பவர். தரித்திரத்தால் பெருந்துன்பமடைபவர். நான் அவரைக் கண்டவுடன் சிவனுகப் பாவித்து, அநேக திரவியங்கொடுத்துத், திருவடிகளில் நமஸ்கரித்து எழுந்து, அவருடைய பாதங்களையலம்பி அந்தச் சலத்தை ஆசமனஞ்செய்து கொண்டபின் சரீரம் நீங்கப்பெற்றேன். சற்பாத்திரத்திலே தானஞ் செய்த அந்தப்புண்ணியத்தால் காவேரிக்கரையிலுள்ள வில்வவனமென்னும் இந்த க்ஷேத்திரத்தில் பிராமணனுகப் பிறந்தேன். பிறந்தும் பிராமணகுலத்துக்குரிய கர்மாநுஷ்டானங்களைவிட்டு வியாபார விருத்தியை மேற்கொண்டேன். அன்றியும் இந்தக் காவேரி தீர்த்தத்தின் மகிமையை யுணர்ந்து தினந்தோறும் சங்கற்ப பூர்வக ஸ்நானஞ் செய்யாமல், உடம்பிலுள்ள அழுக்கு நீங்குதற் பொருட்டு ஸ்நானஞ்செய்து, சந்தியாநேரம் மூன்றிலும் போசனமே பண்ணித், தாசிகளைக் கூடிக்கொண்டு திரிந்தேன். பிராமணர்களை நிந்தித்தேன். கெட்டவர்களோடு சல்லாபஞ் செய்து வந்தேன். கெட்டகாரியங்களையுஞ் செய்தேன்.

அப்படிப்பட்ட நான், ஒருநாள் சாயங்காலத்தில் என்னுடைய தாசியின் சொல்லுக்கு இணங்கிச், சிநேகிதர்களோடுகோயிலுக்குப் போய்ச், சந்நிதானத்தில் நடைபெறும் நடனத்தைப் பார்த்துக்கொண்டிருந்தேன். அப்போது இடபாரூடராய் வீற்றிருக்கின்ற சிவபெருமானுக்குத் தீபாராதனை நடந்தது. பூருவபுண்ணிய விசேஷத்தால் நானும் அன்போடு தரிசித்தேன். அப்படித் தரிசித்தமையாலும், காவேரி ஸ்நானமகிமையாலும், இந்தத்தலத்தில் பிறந்தமையாலும் அந்திய காலத்தில் மகாதேவ என்கிற மங்களகரமான சிவநாமோச்சாரணஞ் செய்தேன். மகாதேவ! மகாதேவ! மகாதேவ என்று சொல்லிக்கொண்டே எவன் தேகத்தை விடுகின்றானே அவன் மேலான கதியை அடைவான். நானும் சிவசந்நிதானத்தில் சிவநாமத்தை உச்சரித்தமையால் பாவங்களெல்லாம் நீங்கப்பெற்றுத் திருக்கைலாசத்தை அடையப் போகிறேன். பூஜ்யனுகின்றேன். சிவபெருமானுல் அநுக்கிரகஞ் செய்யப்பட்டவனுகின்றேன் என்று சொன்னுன்.

அப்போது யமதூதர்கள், குரூரமான உருவத்தையுடையவர்களாய், அவலக்ஷணம் பொருந்திய கண்களையுடையவர்க

ளாய், சூலம் முட்கரம் என்னும் ஆயுதமேந்திய கைகளையுடைய வர்களாய் வந்து, இரதத்தில் ஏறியிருக்கும் அவ்வியாபாரப்பிரா மணனை யடைந்து, இவனைக் கயிற்றாற் கட்டிக் கசையால் அடி த்துப் பயங்கரமான வாளாயுதத்தாற் பிளக்கக்கடவீர்கள். முட் டியாகப் பிடித்த கைகளாற் குத்துங்கள். கூர்மையாகிய நுனி பொருந்திய பற்களாற் கடியுங்கள். பிச்சைக்கு வந்த பிராம ணனைக் கொன்ற இவனைக் குடுமியிற் பிடித்து இழுத்து வாருங் கள் என்று உரத்த சத்தத்தாற் கூறிக்கொண்டு அடித்தார்கள். அதுகண்ட சிவகணங்கள் யமதூதர்களை அடித்தார்கள். இரு பக்கத்தாருக்கும் கலகம் உண்டாயிற்று. அக்கலகத்தில் சிவ கணங்கள் யமதூதர்களை வென்றமையால், அவர்கள் ஓடிப்போய், யமராஜனையடைந்து, வெட்கத்தால் தலைகுனிந்து நின்று நடந்த செயல்களைச் சொன்னார்கள்.

யமராஜன், அவ்வியாபாரப் பிராமணன் சிவநாமோச்சார ணஞ் செய்தமையை அறிந்தும், சிவகணங்கள் தன்னுடைய தூதர்களை அடித்துத் துரத்திய அவமானத்தைப் பொறுக்கமுடி யாமல், கோபத்தாற் சிவந்த கண்களையுடையவனாய்ப், பற்களைக் கடகட என்று கடித்துத், தண்டாயுதத்தை எடுத்துக்கொண்டு, சித்திரன் குப்தன் என்னும் இரு கணக்கர்களும் பக்கத்தில் வர வும், க்ஷயம், அபசுமாரம், குஷ்ட முதலிய ரோக தேவதைகள் பின்தொடரவும், மிருத்தியு என்பவன் முன்னே செல்லவும், எரு மைக்கடா வாகனத்தில் ஏறிவரும்போது, தான் வரும் வழியி லேயே அவ்வியாபாரப் பிராமணனுடைய விருத்தாந்தங்களைச் சித்திரன் குப்தன் என்னும் இருவர்களால் முழுதும் கேட்டுக் கொண்டு, சிவகணங்கள் நிற்கும் இடத்திற்கு வந்துசேர்ந்தான். சிவகணங்கள் அவனோடு யுத்தஞ்செய்தார்கள். அப்பொழுது யமராஜன் கோபங்கொண்டு தன் கையிலுள்ள தண்டாயுதத்தாற் சிவகணங்களை அடித்தான். அடிக்கப்பட்ட சிவகணங்கள் அவ னோடு எதிர்த்துப் போர்செய்ய முடியாமல் நந்திதேவரைச் சரண மடைந்து, சுவாமீ! காவேரிஸ்நான விசேஷத்தாலும், சிவநாமோச் சாரண மகிமையாலும் பாவங்கள் நீங்கப்பெற்றவனாயும், சிவயோ கீசுவரருடைய சந்நிதியில் சிவயோகிநாதரே! என்று கூறி மரண மடைந்தவனாயும் உள்ள வியாபாரப் பிராமணனை யமதூதர்கள்

வந்து சிவபெருமானுடைய ஆஞ்ஞையையுங்கடந்து யமலோகத்துக்குக் கொண்டுசெல்லப் பிரயத்தனஞ் செய்தார்கள். நாங்கள் அவனை எங்கள் வசப்படுத்தி யமதூதர்களை அடித்துத் துரத்தினோம். அவர்கள் போய் யமனிடம் தெரிவிக்க, அவன் கோபத்தாற் சிவந்த கண்களையுடையவனாய் வந்து எங்களைத் தண்டாயுதத்தால் அடிக்க; நொந்து ஆற்றாதவர்களாய்த் தேவரீரை வந்தடைந்தோம் என்று தெரிவித்துக்கொண்டார்கள்.

இவ்வாறு தெரிவித்துக்கொண்டு, உடம்பினின்றும் இரத்தவெள்ளம் வழிய நிற்கின்ற சிவகணங்களைப் பார்த்து, நந்திதேவர் இரக்கமுற்று, யமன்பாற் கோபமிகுந்து, உரோமத்துவாரங்களினின்று நெருப்புப்பொறி கிளம்ப, நாவைச் சுழற்றுதலால் கண்டோர்க்கு அச்சத்தை விளைத்து, குளம்புகளாற் பூமியைக் கிளறி, வாலினால் திக்குக்களை அடித்துக்கொண்டு ஓடிவந்து, யுத்தகளத்தில் நிற்கின்ற யமதூதர்களை வாலினால் அடித்தார். யமனுடைய வாகனமாகிய எருமைக்கடாவைக் கொம்புகளால் வேகமாகக் குத்திப் பூமியில் வீழ்த்தினார். அதுகண்ட யமராஜன் கோபங்கொண்டு தண்டாயுதத்தை எடுத்து நந்திதேவரை யடிக்கத், தண்டாயுதம் அவருடைய சிரசிற்பட்டவளவில் தூளாய்ப் போயிற்று. உடனே யமராஜன் நந்திதேவருடைய கழுத்தைக் கயிற்றாற் கட்டிக் கசையால் அடித்தான். நந்திதேவர் அக்கயிற்றை அறுத்துவிட்டுத் தம்முடைய காற்குளம்புகளால் அவனை மிதித்துக், காதுகளாற் கண்களைக் குத்தி, நாவால் அவனுடைய முகத்தை நக்கி, வாலால் அடித்துப், பற்களால் உடம்பு முழுதுங் கடித்தார். அதனால் யமராஜன் ஒரு முகூர்த்தகாலம் வரை மூர்ச்சையடைந்து கிடந்து பின்பு தெளிந்து கோபங்கொண்டு அபசுமார முதலிய ரோகங்களை நந்திதேவர் மேல் ஏவினான். சொலித்துக்கொண்டு வருகிற அந்த ரோகங்களை நந்திதேவர் நாவால் நக்கியுண்டருளினார். உடனே யமராஜன் சத்தியென்னும் ஆயுதத்தை எடுத்து நந்திதேவருடைய சிரசில் அடிக்க, அவ்வாயுதம் துண்டம் துண்டமாய் அற்றொழிந்தது. அதுகண்டு யமராஜன் மிருத்தியுவை அனுப்ப, அவன் எல்லாத் திசைகளையும் எடுத்து விழுங்குகின்றவன்போல வந்தான். அவனைப்பார்த்து அக்கினி முதலிய தேவர்களெல்லாம் ஆ! ஆ! நாங்கள் என்ன செய்வோம் என்று வருந்

தித் தங்களுடைய சரீர காந்தியும் இழந்து நின்றார்கள். அப்பொழுது நந்திதேவர் மிருத்தியு வருகின்ற நிலைமை தெரிந்து சிவபெருமானைச் சிந்தித்துத் தோத்திரஞ் செய்துகொண்டு, தம்முடைய மகிமையாலும் சிவபெருமானுடைய அனுக்கிரகத்தாலும் அவனைச் சங்கரிப்பதில் உற்சாகமுடையவராய், வாயைத்திறந்துகொண்டு எதிரே நின்று, அவன் சமீபத்தில் வந்தவளவில் அவனை நாவாற் கிரகித்து அதிவேகமாய்ச் சுழற்றி விழுங்கிவிட்டு, யமராஜனையும் கண்ணினால் தகிப்பவர் போலக் கோபம் அதிகரித்து வேறொரு பரமசிவன் போல நின்றார். யமராஜன் அவற்றையெல்லாம் பார்த்துக் கோபங்கொண்டு சூலாயுதத்தையெடுத்து வேகமாகச் சுழற்றி நந்திதேவருடைய சிரசின்மேல் எறிந்தான். முட்டியாகப் பிடித்த கைகளால் அவருடைய திருமேனியிற் குத்தினான். சூலாயுதம் அவருடைய சிரசிற் பட்டவளவில் தூளாய்ப் போயிற்று. முட்டியாகப் பிடித்துக் குத்திய கைகளும் தெறித்தன. உடனே நந்திதேவர் யமனைத் தம்முடைய கார்குளம்புகளாற் கீழே விழுத்தி மிதித்து, கொம்புகளால் வயிற்றைக்குத்திப் பிளந்து, உதிரத்தை யுண்டு, அவனுடைய சிரசிற் காற் குளம்பை வைத்து உயிரைப் போக்குதற்கு ஆயத்தமாய் நின்றார். அவ்வாறு நிற்கின்ற நந்திதேவருடைய செயலைத் தேவர்கள் கண்டு பயந்து, யமன் இறந்து விடில் உலகத்திற் சங்காரகிருத்தியம் நடக்கமாட்டாது; என் செய்வோமென்று வருந்தி, யாவராலும் அடைக்கலம் புகத்தக்கவராயுள்ள சிவபெருமானைச் சரணமடைந்து; நந்திதேவருடைய கோபத்தைத் தணிக்கும்படி செய்து, யமனை விடுவித்துக்கொண்டு மகிழ்ச்சியுடன் தங்கள் உலகம் போய்ச் சேர்ந்தார்கள்.

அரசனே! தேவர்களும் முனிவர்களும் இப்பொழுதும் தங்களுக்கு நேர்ந்த இரணப்பிடை நீங்குதற் பொருட்டுப் பாலும் மாவுங்கொண்டு அந்தத் தலத்தில் நந்திதேவருக்கு அன்போடு அபிஷேகஞ் செய்கின்றார்கள். திங்கட்கிழமையிலாவது வெள்ளிக்கிழமையிலாவது பிரதோஷத்திலாவது பாலும் மாவுங்கொண்டு அபிஷேகஞ் செய்கின்றவர்கள் இஷ்டசித்திகளெல்லாம் பெறுவார்கள். இதிற் சந்தேகமில்லை. இந்தக்கதையைக் கேட்பவர்கள் தங்கள் விருப்பமெல்லாம் நிறைவேறி எல்லா இடங்களிலும் வெற்றியடைவார்கள்.

நந்திவிசயச் சருக்க முற்றிற்று.

---

## நந்தி மகிமைச் சருக்கம்.

தருமவருமன் என்னும் அரசன் நந்திதேவருடைய விசயத்தைக் கேட்டு, நாரதமுனிவரை நோக்கி, சுவாமீ! பின்பு யமன் நந்திதேவரிடத்தினின்றும் எப்படி விடுபட்டான். அதனையும் என்பாற் கிருபை கூர்ந்து உள்ளபடி விரித்துச் சொல்லவேண்டும் என்று கேட்க; நாரத முனிவர் சொல்லத் தொடங்கினர்.

அரசனே கேள். நந்தி தேவர் யுத்தகளத்தில் யமனைக் கீழே விழுத்தி உயிரை வாங்குவதற்கு ஆயத்தமாய் நிற்கும்பொழுது, அதுகண்ட இந்திரன் முதலிய தேவர்கள் பயத்தாற் கலங்கின மனமுடையவர்களாய், நந்திதேவரையடைந்து துதித்துச், சுவாமீ! தேவரீருடைய சந்நிதானத்தில் யமன் எப்படி வந்தான். வந்தாலும் தேவரீரோடு யுத்தஞ் செய்யத் தகுந்தவனு? பிரமன், விஷ்ணு, உருத்திரன் என்னும் மூவரும், இந்திரன் முதலிய அஷ்டதிக்குப் பாலர்களும், மற்றத்தேவர்களாகிய நாங்களும், சித்தர் கந்தருவர் முதலியோர்களும் உம்முடைய சந்நிதியில் இருத்தற்காவது யுத்தஞ்செய்தற்காவது எக்காலமும் தகுதியற்றவர்கள். உம்முடைய சாமர்த்தியம் சிவபெருமானுக்கும் இருக்குமோ இல்லையோ; பிரபுவே! எங்களையெல்லாம் காத்தருளும். எங்கள் பொருட்டும் உலகங்களை அநுக்கிரகித்தற்பொருட்டும் யமனை விடுத்தருளும். இவன் இப்பொழுது கொல்லப்படுவானுயின் மூன்றுலகங்களிலும் தருமம் நடைபெருது என்று பிரார்த்திக்கவும்; நந்திதேவர் கோபமேலீட்டால் தேவர்களுடைய வேண்டுகோளின்படி யமனை விடவில்லை.

அதுகண்ட தேவர்களெல்லாம், தம்மைச்சரணமடைந்தவர்களிடத்தில் விருப்பமுள்ளவராயும், யாவர்க்கும் சுகத்தைத் தருபவராயும் உள்ள சிவபெருமானைச் சரணமடைந்து, உமாநாயகரே! உமக்கு நமஸ்காரம். தேவரீர் கிருபாநோக்கஞ்செய்து எங்களைக் காத்தருளும். நந்திதேவர் யுத்தகளத்தில் யமனுடைய உயிரைக் கிரகித்தற்கு ஆயத்தமாய் நிற்கின்றுர். யமன் இறந்துவிட்டால் பூமியில் புண்ணியம் ஏது? பாவம் ஏது? ஆதலால் யமனைக் காத்தருளும். சுவாமீ! யமன், தேவரீருடைய மகிமை

யையும், தேவரீருடைய நாமோச்சாரண மகிமையையும், தேவரீருடைய அடியார்களின் மகிமையையும், இந்தத் தலத்தின் மகிமையையும், காவேரிக்கரையின் மகிமையையும், ஆக்காவேரி தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்பவர் பெறும் பலனையும் அறியாமல் மூர்க்கத்தன்மையால் நந்திதேவரோடு யுத்தஞ்செய்தான். அவருடைய மகிமைக்கும் யமனுடைய நிலைமைக்கும் எவ்வளவோ தூரமிருக்கிறது. யமனைக் காத்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க; அது கேட்டருளிய சிவபெருமான் உமாதேவியாரோடு யுத்தகளத்துக்குவந்து, நந்திதேவரை நோக்கி யமனை விடும்படி ஆஞ்ஞாபிக்க; உடனே நந்திதேவர் யமனை விட்டருளினர்.

இவ்வாறு யமன் நந்திதேவரால் விடுக்கப்பட்டும், அவரால் முன்பு அமுக்குண்டிருந்த சிரமத்தால் பேசுதற்குச் சக்தியற்றவனுய்ச், சிவபெருமானை மனசிற் சிந்தித்து, சுவாமீ! அடியேனைக் காத்தருளும் காத்தருளும் என்று சரணமடைந்தான். சர்வாந்தர்யாமியாயுள்ள சிவபெருமான் அவனுடைய நிலைமையையறிந்து, தம்முடைய கிருபையாற் கடைக்கண்ணிலிருந்து பெருகுகிற அமிர்ததாரைகளால் அவனை நனைத்து, யமனே! எழுந்திரு. எழுந்திரு. நாம் உனக்கு அநுக்கிரகஞ்செய்கிறோம். உனக்கு நன்மையுண்டாகுக. என்று அருளிச்செய்ய, யமன் அது கேட்டெழுந்து, சிவபெருமானை நோக்கித் தண்டாகாரமாய்ப் பூமியில் விழுந்து நமஸ்கரித்துத் தோத்திரஞ்செய்யத் தொடங்கினன்.

எல்லா உலகங்களுக்கும் தலைவரே! உமக்கு நமஸ்காரம். சந்திரரூபமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். சத்தியரூபமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். சூரியரூபமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். ஞானரூபமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். அக்கினிரூபமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். சுயம்பிரகாசமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். ஜலரூபமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். ஸ்தானரூபமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். பூமிரூபமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். நித்தியரூபமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். வாயுரூபமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். விசுவரூபமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். ஆகாசரூபமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். யக்ஞரூபமாயுள்ளவரே!

உமக்கு நமஸ்காரம். எஜமானரூபமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். தேவர்களால் வழிபடத்தகுந்தவரே ! உமக்கு நமஸ்காரம். இந்திரரூபமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். அவிசுரூபமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். அக்கினிரூபமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். சிருஷ்டிரூபமாயுள்ளவரே ! உமக்கு நமஸ்காரம். யமரூபமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். பூதரூபமாயுள்ளவரே ! உமக்கு நமஸ்காரம். நிருதிரூபமாயுள்ளவரே ! உமக்கு நமஸ்காரம். பயிர்களின்சொரூபமாயுள்ளவரே ! உமக்கு நமஸ்காரம். வருணரூபமாயுள்ளவரே ! உமக்கு நமஸ்காரம். ஆன்மாக்களுடைய சிரமத்தைப் போக்குகின்றவரே ! உமக்கு நமஸ்காரம். வாயுரூபமாயுள்ளவரே ! உமக்கு நமஸ்காரம். தனரூபமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். குபேரரூபமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். தேவதேவரே ! உமக்கு நமஸ்காரம். ஈசானமூர்த்தியே ! உமக்கு நமஸ்காரம். பூமிரூபமாயுள்ளவரே ! உமக்கு நமஸ்காரம். ஆகாசரூபமாயுள்ளவரே ! உமக்கு நமஸ்காரம். காலரூபமாயுள்ளவரே ! உமக்கு நமஸ்காரம். பகல் ரூபமாயுள்ளவரே ! உமக்கு நமஸ்காரம். இராத்திரிரூபமாயுள்ளவரே ! உமக்கு நமஸ்காரம். சந்தியாரூபமாயுள்ளவரே ! உமக்கு நமஸ்காரம். தினரூபமாயுள்ளவரே ! உமக்கு நமஸ்காரம். பக்ஷரூபமாயுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். மாச ரூபமாயுள்ளவரே ! உமக்கு நமஸ்காரம். இருதுரூபமாயுள்ளவரே ! உமக்கு நமஸ்காரம். அயனரூபமாயுள்ளவரே ! உமக்கு நமஸ்காரம். வருஷரூபமாயுள்ளவரே ! உமக்கு நமஸ்காரம். சரரூபமாயுள்ளவரே ! உமக்கு நமஸ்காரம். அசரரூபமாயுள்ளவரே ! உமக்கு நமஸ்காரம். துக்கரூபமாயுள்ளவரே ! உமக்கு நமஸ்காரம். சுகரூபமாயுள்ளவரே ! உமக்கு நமஸ்காரம். காரியரூபமாயுள்ளவரே ! உமக்கு நமஸ்காரம். காரணரூபமாயுள்ளவரே ! உமக்கு நமஸ்காரம். படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூன்று தொழில்களுக்கும் காரணமாயுள்ளவரே ! உமக்கு அந்நியமாக இவ்வுலகத்தில் ஒன்றுமில்லை. உம்மாலேயே ஜீவகோடிகளின் நிருமாணத்தின் பொருட்டு மூன்றுபேர் சிருஷ்டிக்கப்பட்டுள்ளார்கள். அவர்களுள் ரஜோகுண அம்சத்தால் பிரமாவைச் சிருஷ்டியிலும், சத்துவகுண அம்சத்தால் விஷ்ணுமூர்த்தியைப் பரிபாலனத்திலும், தமோகுண அம்சத்தால் உருத்திரமூர்த்தியைச் சங்காரத்திலும் வைத்தருளினீர். உம்மா

லேயே முற்காலத்தில் தருமசாஸ்திரங்கள் கூறப்பட்டுள்ளன. நான் புண்ணியபாவங்களைப் பகுத்தற்பொருட்டு முற்காலத்தில் உம்மாற் படைக்கப்பட்டேன். ஆன்மாக்கள் செய்யும் புண்ணிய பாவங்களுக்குப் பஞ்சபூதங்கள் சாக்ஷியாய் நிற்கின்றன. புண்ணியஞ் செய்தவர்கள் பொருட்டுப் புண்ணியலோகங்கள் முற்காலத்தில் உம்மாலேயே அமைக்கப்பட்டன. அவ்வாறே பாவஞ்செய்தவர்கள் பொருட்டு நரகங்களும் அமைக்கப்பட்டன. நான் சீவர்கள் உடலை விட்டு நீங்குங்காலத்தில், சித்திரன் குப்தன் என்னும் இரண்டு கணக்கர்களால், அவரவர் செய்த புண்ணிய பாவங்களை வரையறுத்து அறிந்து, தரும சாஸ்திரத்தையநுசரித்து அவ்வப் பலன்களை அவரவரே அநுபவிக்கும்படி செய்து, எல்லாச் சீவர்களையும் உமது ஆக்ஞையின்படியே நற்கதியடையச் செய்கின்றேன். இந்தப் பிராமணன் பெரும் பாவஞ் செய்தவன். பிராமணருக்குரிய சற்காரியங்களைக் கைவிட்டவன். உரித்தல்லாத வியாபாரத்தைக் கைக்கொண்டவன். பிச்சைக்கு வந்த பிராமணனைக் கொன்றவன். அப்படிப்பட்ட பெரும் பாவியாயுள்ள இவன் மரணகாலத்தில் உம்முடைய திருநாமங்களை இரண்டொரு முறை சொன்னமையால் எல்லாப்பாவங்களும் நீங்கப் பெற்று மோக்ஷமடையத்தகுந்தவனாக எப்படி ஆவான். எம்பெருமானே! அதன் உண்மையை அடியேன்மீது கிருபை கூர்ந்து சொல்லியருளவேண்டுமென்று பிரார்த்திக்கச், சிவபெருமான் சொல்லத் தொடங்கினார்.

யமனே கேள். சிவபெருமானுடைய திருநாமத்தை அறியாமையினாலேனும் மரணகாலத்திற் கூறுவோன் மேலாகிய கதியை யடைவான். ஒருவன் மகா பாதகங்களைச் செய்தாலும் அவன் எப்பொழுதும் சிவநாமங்களைச் சொன்னாலும் கேட்டாலும் மேலான கதியை யடைவான். ஒருவன் புத்திபூருவமாகத் தனக்குரிய தருமங்களெல்லாவற்றையும் செய்யாதிருந்தும் அந்திய காலத்திற் சிவநாமத்தைச் சொல்லுவானாயின், அவனும் மேலான கதியை யடைவான். ஒருவன் துலாதானம் சகசிர பசுத் தானமுதலிய மகாதானங்களை வாங்குங்காலத்தில், சிவநாமத்தைச் சொல்லுவானாயின், அவனும் மேலான கதியை யடைவான். ஒருவன் சண்டாளனாயிருந்தாலும், பதிதனாயிருந்தாலும் சீவனத்

தின்பொருட்டுச் சிவநாமத்தை எப்பொழுதும் சொன்னால் அவன் மேலாகிய கதியை யடைவான். ஒருவன் உயிரோடிருக்கும் வரை பாவங்களேயே செய்திருந்தும், அந்திய காலத்தில் விஷ்ணு நாமத்தையாவது, சிவ நாமத்தையாவது சொல்லுவானாயின் அவனும் மேலான கதியை யடைவான். ஒருவன் ஸ்நானம், தானம், செபம், ஓமம், சிராத்தம் ஆகியவற்றைச் செய்துகொண்டிருக்கும்பொழுது சிவ நாமத்தைச் சொன்னால் அவன் மேலாகிய கதியை யடைவான். காவேரியின் வடகரையிலுள்ள திருவியலூரென்னும் வில்வாரணிய க்ஷேத்திரத்திலாவது அதற்குச் சமீபத்திலாவது ஒருவன் இறந்தால் அவன் மேலான கதியை யடைவான். கேரள தேசத்திலாவது, கொங்கண தேசத்திலாவது, சண்டாளனுடைய வீட்டிலாவது ஒருவன் சிவநாமத்தைச் சொன்னால் அவன் மேலான கதியை யடைவான். இந்த வியாபாரப் பிராமணன் எப்பொழுதும் காவேரியில் ஸ்நானஞ்செய்துகொண்டிருந்து அந்திய காலத்தில் சிவ நாமத்தை உச்சரித்தமையால் புண்ணிய லோகத்தை யடைபவனானான். சிவ சந்நிதியில் சிவ நாமத்தை நினைத்துக்கொண்டு இறக்கும் ஒருவன் எவ்வளவு பாவஞ்செய்திருந்தாலும் அவைகளெல்லாம் அவனைச் சம்பந்திக்கமாட்டா. அவனுக்கே கைலாசம் உள்ளங்கையிலுள்ளது. நானும் அவனுக்குக் கிருபை செய்வேன். கங்கைக் கரையிலாவது, காவேரிக்கரையிலாவது வசிப்பவர்கள் உடலைவிட்டு நீங்கியபின் கைலாசத்திலாவது, வைகுண்டத்திலாவது இருப்பார்கள். கங்கைக்கரையிலும், காவேரிக்கரையிலும் பிறந்தவர்களெல்லாம் மோக்ஷமடைவார்கள். சத்தியம். சத்தியமாகச் சொல்லுகிறேன். காவேரிக்கரையிற் பிறந்தவர்களும் காவேரி தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தவர்களும் எவ்வளவு பாவஞ்செய்திருந்தாலும் மறு ஜன்மத்தை யடையமாட்டார்கள். ஒருவன் காவேரி தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து சிரத்தையினாலாவது, விளையாட்டினாலாவது நம்முடைய திருநாமத்தைச் சொன்னால் அவன் நமக்கு விருப்பமுள்ளவன். காவேரி ஸ்நானத்தில் ஆசையுள்ளவனையும், வில்வாரணியம் என்னும் திருவியலூரில் வசிப்பவனையும், சிவநாமத்தைச் சொல்வதில் விருப்பமுடையவனையும் உள்ளவனை நீ எப்பொழுதும் பூசிக்கக்கடவாய். அன்னதானஞ் செய்தற்கு விருப்பமுடையவனையும், அந்நியப் பெண்களுக்குச் சகோதரனையும், சத்தியசந்தனையும்,

கோபமில்லாதவனுயும் உள்ளவனை எப்பொழுதும் நீ பூசிக்கக் கடவாய். நீ நம்முடைய அநுக்கிரகம்பெற விரும்புவாயானுல், காவேரிக்கரையில் வாசஞ்செய்துகொண்டு நம்பால் அன்புகூர்ந்து சிவநாமோச்சாரணஞ் செய்பவர்களைப் பூசிக்கக்கடவாய் என்று சிவபெருமான் ஆஞ்ஞாபித்தருளினுர்.

அதுகேட்ட யமராஜன் சுவாமீ! சிவ நாமோச்சாரணமகிமையையும், காவேரியின் மகிமையையும் நான் அறிந்துகொள்ளவில்லை. கிருபாநிதியே! அடியேன் செய்த குற்றத்தைப் பொறுத்தருளும் என்று பிரார்த்தித்துப் பூமியில் தண்டாகாரமாய் விழுந்து நமஸ்கரித்தான். சிவபெருமான் அவன்பாற் கிருபைகூர்ந்து, நீ உன்னுடைய உலகத்திற்குச் செல்வாயாக என்று ஆஞ்ஞாபிக்க, யமன் தன்னுடைய உலகம் போய்ச் சேர்ந்தான்.

அதன்பின் சிவபெருமான், நந்திதேவரை அழைத்து, இரண்டு திருக்கரங்களாலும் ஆலிங்கனஞ்செய்துகொண்டு, நந்திதேவனே! யமன் தேவர்களாலும் ஜெயிக்க முடியாதவன். அப்படிப்பட்டவன் உன்னுல் ஜெயிக்கப்பட்டான். அன்றியும் நீ மிருத்தியு என்பவனை எப்படிச் செயித்தாய்? நீ எப்பொழுதும் ஒப்புயர்வற்ற கீர்த்தியுடையவனுகக் கடவாய். பூமியில் உன் காற்குளம்புகளால் தோண்டப்பட்ட இந்தத் தீர்த்தம் மூன்று லோகங்களிலுமுள்ள எல்லாப் பாவங்களையும் நீக்குவதாயும், தேவர்களுக்கும், மனிதர்களுக்கும் வெற்றியைக்கொடுப்பதாயும் இருக்கக்கடவது. இத் தீர்த்தத்தில் ஒருவன் ஒருமுறை ஸ்நானஞ்செய்தால் அவனுக்கு ஏழு பிறவிகளிற்செய்த பாவங்களெல்லாம் நீங்கும். நம்முடைய ஆஞ்ஞையால் இந்தத் தீர்த்தத்தில் எல்லாத் தீர்த்தங்களும் வசிக்கக்கடவன. பரணிநக்ஷத்திரஞ் சேர்ந்த செவ்வாய்க்கிழமையிற் சூரியோதயத்தில் சிவபெருமானைத் தியானித்துச் சங்கற்பஞ் செய்துகொண்டு இதில் ஸ்நானஞ் செய்பவன் யமலோகத்தை யடையமாட்டான். அநேக புண்ணியங்களை யுடையவனுவான். பாவங்களெல்லாவற்றையும் நீக்கத்தக்க இது நந்தி தீர்த்தம் என்று பிரசித்திபெற்று விளங்குக. தேவர்களும், மனிதர்களும் உன் பெயரைத் துதிக்கக் கடவர்கள். என்று அநுக்கிரகஞ்செய்து, அதன்பின், பக்கத்தில் நிற்கின்ற

வியாபாரப் பிராமணனை நோக்கி, நீ இப்பொழுதே கைலாசம் செல்லக்கடவாய். அங்கே பிரமதேவன் முத்தியடையுங் காலத்தில் உனக்கும் முத்தி தருகின்றோம் என்று கூறியருளிப், பின்பு அங்கே சூழ்ந்து நிற்கின்ற தேவர்களைத் தத்தம் உலகம் போய்ச் சேர அனுமதி கொடுத்தனுப்பிவிட்டு, உமாதேவியாரோடு சுயம் பிரகாச் சொரூபமாயுள்ள லிங்கத்தில் மறைந்தருளினார். அரசனே! சிவயோகீசுவரருடைய சன்னிதானத்தில் நந்திதேவருடைய காற் குளம்பினால் தோண்டப்பட்ட இடம் இப்பொழுதும் நந்தி தீர்த்தமென்று சொல்லப்படுகிறது. சிவபெருமானுடைய ஆஞ்ஞையின்படி அந்தத் தீர்த்தத்தில் எல்லாத் தீர்த்தங்களும் எப்பொழுதும் வசிக்கின்றன. நந்தி தீர்த்த மகிமையைப் படிப்பவனும், கேட்பவனும், கேட்கும்படி செய்பவனும் இந்திரிய நிக்கிரகஞ் செய்தவனாவான். இது சத்துரு ஜயத்தைக் கொடுக்கும்.

நந்தி மகிமைச் சருக்க முற்றிற்று.

---

## சூல தீர்த்த மகிமைச் சருக்கம்.



தருமவருமன் என்னும் அரசன் நந்திதேவருடைய மகிமையைக்கேட்டு, மேலும் சிவயோகீசுவரருடைய மகிமையைக் கேட்க விரும்பி, நாரதமுனிவரை நோக்கி, சுவாமீ! இந்தத்தலத்தில் சிவசம்பந்தமான தீர்த்தங்களும் நதிகளும் இன்னும் எவை உள்ளன. அவற்றை எனக்கு விரிவாகச் சொல்லியருள வேண்டுமென்று கேட்க, நாரதமுனிவர் சொல்லத்தொடங்கினார்.

அரசனே கேள். இந்தத்தலத்தில் தீர்த்தங்கள் உண்டான காரணத்தைச் சொல்லுகிறேன். முற்காலத்தில் சிங்கமுகன் என்னும் இராக்ஷதன் ஒருவன் இருந்தான். அவன் உலகத்தில் பிரசித்திபெற்றவன். இராவணனுக்கு மாமனாகிய மாரீசன்போலக்

கோடிசிங்க பலமுடையவன். அவன் எல்லா உலகங்களையும் வெல்லுதற்கு எண்ணிக் குரூரமான தவஞ்செய்தான். அவனுடைய தபோக்கினியால் தேவர்களும்பிரமன் விஷ்ணுஉருத்திரன்என்னும் மும்மூர்த்திகளும்பீடிக்கப்பட்டார்கள். அப்பொழுது தேவர்களெல்லாம் வந்து, விஷ்ணு மூர்த்தியை வணங்கி, அவனுக்கு அநுக்கிரகஞ்செய்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க, விஷ்ணுமூர்த்தி அவனுக்கு எதிரே தோன்றி, சிங்கமுகனே! இனி நீ தவஞ்செய்ய வேண்டாம். உனக்கு நன்மையுண்டாகக்கடவது. நீ செய்ததவத்திற்குப் பலன் கிடைக்கும். உனக்கு வேண்டிய வரங்களைக்கேள். இப்பொழுதே தருகிறேன் என்று சொல்ல, அதுகேட்ட சிங்கமுகன் தன்னுடைய கண்களைச் சிறிது திறந்து நோக்கி, விஷ்ணுமூர்த்தி வந்திருக்கின்றார் என்று அறிந்து, அவரையும் அவரோடு வந்திருக்கிற பிரமதேவரையும் உருத்திரமூர்த்தியையும் வணங்கி எழுந்து நின்று, சுவாமீ! தேவரீர் என்னுடைய தவத்துக்கு மகிழ்ந்தருளுவீரானால், எனக்குப் படைத்தற்றொழிலிற் சாமர்த்தியத்தையும், காத்தற்றொழிலில் எல்லாவசியத்தன்மையையும் அழித்தற்றொழிலில் வன்மையையும், சமஸ்தமாயாபலத்தையும், எல்லாவுலகங்களுக்கும் எக்காலமும் நானே அரசனாயிருக்குந்தன்மையையும், நான் விரும்பிய பொருள்கள் உடனே கிட்டுந்தன்மையையும், மற்றும் எல்லா நலன்களையும் தந்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க, விஷ்ணுமூர்த்தி அவ்வாறே வரங்கொடுத்தருளினார். பின் மும்மூர்த்திகளும், அங்கு நின்ற இந்திரன் முதலிய திக்குப்பாலகர்களால் பூசிக்கப் பெற்று தத்தம் உலகம் போய்ச் சேர்ந்தார்கள். சிங்கமுகனும் தன்னுடைய நகரம் போய்ச் சேர்ந்தான்.

அப்பால் சிங்கமுகவிராக்ஷதன் தன்னுடைய சேனைகள் சூழ்ந்துவரச் சென்று, எல்லாத் தேவர்களையும் வென்று, மேலைச் சமுத்திரத்தின் மத்தியில் இலக்ஷயோசனை விசாலமுள்ள இடத்தின் நடுவில் அமைந்த கற்பகவனத்திலுள்ள மணித்துவீபத்தில், ஏழுகோட்டைகளையுடையதாயும், சுவர்ணமாளிகைகளாற் பிரகாசிக்கிறதாயும் தேவர்களுக்கும் அடைதற்கு அருமையாயும் உள்ள ஒரு பட்டணத்தையுண்டுபண்ணி அதில் இருந்துகொண்டு, இராக்ஷதர்களையெல்லாம் பரிபாலித்து வந்தான். இவ்வாறு அநேக கோடியுகங்கள் சென்றன. அதன்பின் அந்த இராக்ஷதன், சிவபெரு

மான் திரிபுர அசுரர்களை வென்றமையைக் கேள்வியுற்று, யுகாந்த காலத்து அக்கினிபோலக் கோபங்கொண்டு, சிவபெருமானை வெல்ல வேண்டுமென்னும் முயற்சியுள்ளவனாகி, விஷ்ணுமூர்த்தி சிவபெருமானிடத்துப் பிரியமுள்ளவராகவும், பிரமன் இந்திரன் முதலிய தேவர்கள் சேவகர்களாகவும், பிராமணர்களெல்லாம் அன்பர்களாகவுமிருப்பதால் அவர்களையும் வெல்லவேண்டுமென்று எண்ணி, முதலில் விஷ்ணு லோகம் போய்ச் சேர்ந்து அவரோடு அநேகயுத்தஞ்செய்து வென்று, பிறகு சத்தியலோகத்தையடைந்து பிரமதேவரையும் வென்று, அங்கு நின்றும் தேவலோகத்திற்போய் அங்குள்ள தேவர்களையெல்லாம் வென்று, இந்திரனைப் பிடித்துக் கட்டித் தன்னுடைய பட்டணத்துக்கு அனுப்பிவிட்டுப், பசுக்களையும் பிராமணர்களையுங் கொன்று திரிந்து திருக்கைலாசமலை போய்ச் சேர்ந்தான்.

அப்பொழுது பார்வதிதேவியார் சிங்கமுகராக்ஷதன் வருவதைக் கண்டு பயந்து நடுங்கிச், சிவபெருமானை ஆலிங்கனஞ்செய்துகொண்டு, சுவாமீ! மகாதேவரே! இவன் யமனுக்குச் சமமானவன். எல்லாத் தேவர்களும் பிராமணர்களும் பசுக்களும் இவனால் துன்பமடைகிறார்கள். பிரமகத்தி செய்தவனையும், தேவகண்டகனையும் உள்ள இவனைக் கொன்றருள வேண்டும். பராமுகமாயிருக்கப் படாதென்று பிரார்த்திக்க; கிருபாநிதியாகிய சிவபெருமான் அவனோடு அநேக வருஷகாலம் யுத்தஞ்செய்தார். அந்த யுத்தத்தில் சிங்கமுகனால் நந்திதேவர், விநாயகர், சுப்பிரமணியர் முதலானவர்களும் பூதகணங்களும் தாக்குண்டு வெல்லப்பட்டவர்களாய் அவனோடு எதிர்த்து நிற்கமுடியாமல் சிவபெருமானைச் சரணமடைந்தார்கள். சிவபெருமான் அவனுடைய பராக்கிரமத்தை நினைத்துக் கோபத்தாற் சிவந்த கண்களையுடையவராய், எல்லா அஸ்திரங்களையும் அவன் மேல்விட, அவைகள் பயனற்றுப் போயின. அதுகண்டு அவனுடைய வீரத்தன்மையைப் பாராட்டிச் சூலாயுதத்தை எடுத்துப் பலமுறைசுழற்றி அவனுடைய மார்புக்கு இலக்கு வைத்துவிட்டு, அவனைக் கண்களால் தகிக்கின்றவராய் நிற்க; சூலாயுதம் அவனுடைய மார்பைப் பிளந்து ஊடுருவிச்சென்று தண்டகாரணியத்தில் சிவயோகீசுவரருடைய சந்நிதானத்தில் விழுந்தது. சிங்கமுகவிராக்ஷதனும்சூலாயுதத்தின்வேகத்தால்இழு

க்கப்பட்டு அவ்விடத்தில் வந்து விழுந்தான். சூலாயுதம் பாதாள கங்கையில் ஸ்நானஞ்செய்து மீண்டும் சிவபெருமானை யடைந்தது.

இவ்வாறு சிங்கமுகன் இறந்தபொழுது, தேவர்களெல்லாம் ஆனந்தமேலீட்டால் வாத்தியங்களை முழக்கினார்கள். தெய்வப் பெண்கள் நடனஞ்செய்தார்கள். கற்பகப்பூ மழை பொழிந்தது. இந்திரன் முதலிய கணங்கள் தோத்திரம் பண்ணினார்கள். பின்பு தேவர்களெல்லாம் கவலையற்றவர்களாய்ச், சிவபெருமானை நமஸ்கரித்துத் தோத்திரஞ்செய்து திருவருள் பெற்றுக்கொண்டு, தங்கள் தங்கள் உலகம் போய்ச் சேர்ந்து, முன்பு இழந்த இராச்சியத்தைப் பெற்று வாழ்ந்திருந்தார்கள். சூலாயுதத்தாற் பிளக்கப்பட்ட சிங்கமுகவிராக்ஷதனும் அதன் அக்கினிச் சுவாலையால் தகிக்கப்பட்டுச் சாம்பராய் முடிந்தான். சூலாயுதம் பூமியில் விழுந்து பிளந்த இடத்திலிருந்து பாதாள கங்கையெழுந்து பிரவகித்தது. அப்பொழுது சிங்கமுகவிராக்ஷதன், அந்தக் கங்கா ஜலத்தால் சிவசந்நிதியில் தன்னுடைய சாம்பல் நனைக்கப்பட்டமையாலும், இந்தத்தலத்தின் மகிமையாலும், சிவபெருமானால் இறந்தமையாலும் மோக்ஷமடைந்தான்.

தேவர்களெல்லாம் அதைப்பார்த்து ஆச்சரியமடைந்து வில்வவனத்துக்கு வந்து, சிவயோகீசுவரருக்குத் தென் பாகத்திலுள்ள புண்ணியமயமான சூலதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து அதன் கரையை யடைந்து, நாமெல்லாம் எப்பொழுதும் இவ்விடத்திலேயே அரசவிருக்ஷரூபமாக வசிப்போமென்று நிச்சயித்துப், பிரமதேவர் அடியிலும், விஷ்ணுமூர்த்தி நடுவிலும், உருத்திரமூர்த்தி நுனியிலும் அஷ்ட திக்குப்பாலகர் கிளைகளிலும், மற்றத் தேவர்கள் எல்லா இலைகளிலும் இருந்து, அரசமரவடிவமாய் வசித்தார்கள். சூலாயுதத்தாற் பிளக்கப்பட்ட இடத்திலிருந்து எழுந்த கங்கை சூலதீர்த்தம் என்று வழங்கப்படுகின்றது. அந்தத் தீர்த்தத்தில் ஒருமுறை ஸ்நானஞ் செய்தால் ஏழு பிறவிகளிற் செய்த பாவங்களெல்லாம் நீங்கும். சூலதீர்த்தத்தின் பிரபாவத்தால் இந்த க்ஷேத்திரம் பூமியில் பரிசுத்த ஸ்தானமாக இருக்கிறது. எல்லா நதிகளும் காவேரியையும் சூலதீர்த்தத்தையும் சக்கரதீர்த்தத்தையும் தரிசனஞ் செய்தலால் மேன்மையடைந்திருக்கின்றன. சூல

தீர்த்தம் சக்கர தீர்த்தம் என்னும் இரண்டு தீர்த்தங்களும் காவேரி தீர்த்தத்தோடு சம்பந்தப்பட்டமையால் மேன்மைபெற்றுள்ளன. காவேரிதீர்த்தமும் இவ்விரண்டு தீர்த்தங்களோடு சம்பந்தப்பட்டமையால் மேன்மை பெற்றுள்ளது. இவ்வாறு சூலதீர்த்தம் சக்கர தீர்த்த மென்பவற்றால் காவேரியும், காவேரியால் இவ்விருதீர்த்தங்களும் மேன்மை பெறுமென்று நிச்சயித்தே, முன்பு அகத்திய முனிவர் காவேரி நதியைக் கொண்டு வந்தார். இந்த இரண்டு தீர்த்தங்களுக்கு மத்தியில் காவேரி தீர்த்தம் பிரவகிக்கிறது. காவேரி தீர்த்தத்திலேயே சூலதீர்த்தமிருக்கிறது. அது மூன்றுலகங்களிலும் பரிசுத்தமுள்ளது. அத்தீர்த்தத்தில் கங்கை முதலிய தீர்த்தங்கள் இப்பொழுதும் வசிக்கின்றன. இந்த க்ஷேத்திரத்தில் செய்யப்பட்ட புண்ணியம் ஒன்று கோடியாகும். ஆதலால் எவ்வித முயற்சி செய்தும் இந்தத் தலத்தில் நித்தியம் தானஞ்செய்வது நலம்.

சூரியன் மேஷராசியிலிருக்கும்பொழுது (சித்திரை மாசத்தில்) சிவயோகீசுவரருடைய சந்நிதானத்தில் தைல பக்குவங்களாயும், விசித்திரங்களாயும் உள்ள சித்திரான்னங்களையும், நெய்யும் வெல்லமுங்கலந்த இனிமையான சருக்கரைப் பொங்கலையும், நெய்யும் பருப்புங்கலந்த பருப்புப் பொங்கலையும் பிராமணர்கள் பொருட்டுத் தானங்கொடுப்பவனுக்குள்ள புண்ணியம் அளவிடமுடியாது. இன்னும் அந்த மாசத்தில், சிவயோகீசுவரருடைய சந்நிதானத்தில் சம்பகம், சாதி, மல்லிகை யென்னும் புஷ்பங்களையும், திவ்வியமான மற்றும் வாசனைப் புஷ்பங்களையும், தாழம்பூவையும் பிராமணர்கள் பொருட்டுத் தானங்கொடுப்பவனுக்குள்ள புண்ணியம் அளவிடமுடியாது.

சூரியன் இடபராசியிலிருக்கும்பொழுது (வைகாசி மாசத்தில்) சிவயோகீசுவரருடைய சந்நிதியில், குங்குமம் பச்சைக்கர்ப்பூர முதலியவையும் பனிநீருங்கலந்த சந்தனக்குழம்பை மனம் வேறொன்றிற் செல்லாமல் அன்போடு பிராமணர்களுக்குத் தானங்கொடுப்பவனுக்குள்ள புண்ணியம் அளவிடமுடியாது. இன்னும் வைகாசி மாசத்தில், சிவயோகீசுவரருடைய சந்நிதானத்தில், வாழைப்பழம், மாம்பழம், பலாப்பழமுதலிய பழங்களும் பழச்

சத்துக்களும், நல்ல பாலும், சருக்கரையும் ஆகியவற்றைப் பிராமணர்களுக்குத் தானங்கொடுப்பவனுக்குள்ள புண்ணியம் அளவிடமுடியாது. இன்னும் அந்த மாசத்தில், சிவயோகீசுவரருடைய சந்நிதானத்தில், நதிநீர் பாய்வதும் கண்வாய்நீர் பாய்வதுமாயுள்ள வயல்களையும், உழவுக்குரிய இரட்டை இடபங்களையும், மற்றும் விதைக்குரிய தானியங்களையும் பிராமணர்களுக்குத் தானங்கொடுப்பவனுக்குள்ள புண்ணியம் அளவிடமுடியாது. இன்னும் அந்த மாசத்துப் பௌர்ணிமையில், சிவயோகீசுவரருடைய சந்நிதானத்தில், சூரியோதயகாலத்தில் எலுமிச்சம்பழ அன்னம், மிளகு இஞ்சி கலந்த சம்பா அன்னம், தயிரன்னம் ஆகியவைகளைக் கறிகளோடு பிராமணர்களுக்குத் தானங்கொடுப்பவனுக்குள்ள புண்ணியம் அளவிடமுடியாது.

சூரியன் மிதுனராசியிலிருக்கும்பொழுது (ஆனி மாசத்தில்) சிவயோகீசுவரருடைய சந்நிதியில் கறிகள், இலைகள், கிழங்குகள், அரிசி முதலியவற்றையும், பருப்பு, அப்பம், நெய், வியஞ்சனம் ஆகிய இவற்றுடன் அன்னங்களையும், பாலன்னத்தையும், சருக்கரைப்பொங்கலையும் பிராமணர்களுக்குத் தானங்கொடுப்பவனுக்குள்ள புண்ணியம் அளவிடமுடியாது.

சூரியன் கடகராசியிலிருக்கும்பொழுது (ஆடிமாசத்தில்) சிவயோகீசுவரருடைய சந்நிதியில், சுரைக்குடுக்கை, மரப்பாத்திரம், மட்பாத்திரம், காஷாயவஸ்திரம், சூத்திரம், மூங்கிற்றண்டம் ஆகியவற்றை யதிகளுக்குத் தானங்கொடுப்பவனுக்குள்ள புண்ணியம் அளவிடமுடியாது.

சூரியன் சிங்கராசியிலிருக்கும்பொழுது(ஆவணிமாசத்தில்) பிராமணர்களைக்கொண்டு சதருத்திரீய செபஞ் செய்வித்துச் சிவயோகீசுவரருக்கு அபிஷேகஞ்செய்து, அவருடைய சந்நிதானத்தில் அந்தப்பிராமணர்களுக்கு வஸ்திரங்களையும்,ஆபரணங்களையும் கொடுப்பவனுக்குள்ள புண்ணியம் அளவிடமுடியாது. இன்னும் அந்த மாசத்தில் சிவயோகீசுவரருடைய சந்நிதானத்தில் பாலன்னமும், நெய், சர்க்கரை, வாழைப்பழம் கலந்த பஞ்சாமிருதமும் ஆகியவற்றைப் பிதிர்க்களையும் தேவர்களையும் உத்தேசித்துத், தின

ந்தோறும் மத்தியானத்தில் மகிழ்ச்சியுடன் பிராமணர்களுக்குத் தானங்கொடுப்பவனுக்குள்ள புண்ணியம் அளவிடமுடியாது.

சூரியன் துலாராசியிலிருக்கும்பொழுது (ஐப்பசி மாசத்தில்) சிவயோகீசுவரருடைய சந்நிதியில் உருத்திராக்ஷமாலை, துளசிமாலை, கோபிசந்தனம், விபூதி ஆகியவற்றோடு இரண்டு வஸ்திரங்களைப் பெட்டியில் வைத்துப் பிராமணர்களுக்குத் தானங்கொடுப்பவனுக்குள்ள புண்ணியம் அளவிடமுடியாது.

சூரியன் விருச்சிகராசியிலிருக்கும்பொழுது (கார்த்திகை மாசத்தில்) சிவயோகீசுவரருடைய சந்நிதானத்தில் தங்கம், வெள்ளி, வெண்கல முதலிய பாத்திரங்களொன்றில் எண்ணெயேனும் நெய்யேனும் வார்த்துத் தீபமேற்றி, அன்போடு பிராமணர்களுக்குக் கொடுப்பவனுக்குள்ள புண்ணியம் அளவிடமுடியாது. இன்னும் அந்தமாசத்தில் சிவயோகீசுவரருடைய சந்நிதானத்தில் பாசிப்பருப்பு, துவரம்பருப்பு, கடலைப்பருப்பு, பலகாரங்கள், வியஞ்சனம், சர்க்கரையும் நெய்யுங்கலந்த சர்க்கரைப் பொங்கல், பாலுந்தயிருங் கலந்த அன்னம், ஆறுசுவையோடு கூடிய சித்திரான்னங்கள், பயற்றம்பருப்புக்கலந்த பாயசம் ஆகியவைகளுடன் உயர்ந்த அரிசியாலாகிய அன்னத்தை நெல்லிமரம் பலாமரம் ஆகியவற்றின் அடியிற் படைத்து, மனைவி புத்திரனுடன் நின்று, விஷ்ணுமூர்த்தியையும் சிவபெருமானையும் தியானித்து, துளசி வில்வபத்திர முதலியவைகொண்டு சகசிரநாமமுதலியவற்றால் அருச்சித்து, விதிப்படி நிவேதித்துப், பிராமணர்களுக்குத் தானங்கொடுப்பவனுக்குள்ள புண்ணியம் அளவிடமுடியாது.

சூரியன் தனுராசியிலிருக்கும்பொழுது (மார்கழி மாசத்தில்) சிவயோகீசுவரருடைய சந்நிதியில், சமைக்கப்பட்ட பலவகைக் கறிகள், வாழைப்பழம், சர்க்கரை, நெய்கலந்த பருப்புப் பொங்கல் ஆகியவைகளை விஷ்ணுமூர்த்திக்கும் சிவபெருமானுக்கும் நிவேதனம் பண்ணிப் பிராமணர்களுக்குத் தானங்கொடுப்பவனுக்குள்ள புண்ணியம் அளவிடமுடியாது. சூரியன் மகராசியிலிருக்கும்பொழுது (தை மாசத்தில்) சிவயோகீசுவரருடைய சந்நிதியில், உரோமத்தாற் செய்யப்பட்ட பலவகைக்கம்பளங்களை

யும் கனத்த வஸ்திரங்களையும் முயன்று சம்பாதித்துக், குளிரினால் வரும் அச்சம் நீங்குதற்பொருட்டுப் பிராமணர்களுக்குத் தானங் கொடுப்பவனுக்குள்ள புண்ணியம் அளவிடமுடியாது.

சூரியன் கும்பராசியிலிருக்கும்பொழுது (மாசி மாசத்தில்) சிவயோகீசுவரருடைய சந்நிதியில், சம்பாநெல்லோடு கூடினதாயும், மூன்றுபோகம் விளைவதாயும், ஆயிரம் பாரமென்னும் அளவு பொருந்திய தானியங்கள் நிறைவதாயும், நதிநீர் பாய்வதாயும் உள்ள வயலைப் பிராமணர்களுக்குத் தானங்கொடுப்பவனுக்குள்ள புண்ணியம் அளவிடமுடியாது. இன்னும் மாசி மாசத்தில் சிவயோகீசுவரருடைய சந்நிதியில் செங்கலாற் கட்டப்பட்டதாயும், மனோரம்மியமாயும், தனம் தானியம் நிறைந்ததாயும், தோப்புத் துரவுகளுள்ளதாயும், பாத்திரமுதலானவையுள்ளதாயும், மேற்கட்டியாற் பிரகாசிப்பதாயும் உள்ள வீடுகளைப் பிரயத்தனஞ்செய்து கட்டிப், பிராமணர்களுக்குத் தானங்கொடுப்பவன் பெறும் புண்ணியம் அளவிடமுடியாது.

சூரியன் மீனராசியிலிருக்கும்பொழுது (பங்குனி மாசத்தில்) சிவயோகீசுவரருடைய சந்நிதியில், வெல்லங்கலந்தநீர் (பானகம்) நீர்மோர், இளநீர், பச்சைக்கர்ப்பூரம் ஏல முதலியவை கலந்து வாசனையுள்ள குளிர்ந்த நீர் ஆகியவற்றைத் தங்கம், வெள்ளி, தாமிரமுதலிய பாத்திரங்களொன்றில் வைத்துத் தக்ஷிணையோடு பிராமணர்களுக்குத் தானங் கொடுப்பவனுக்குள்ள புண்ணியம் அளவிடமுடியாது. இன்னும் அந்த மாசத்தில் சிவயோகீசுவரருடைய சந்நிதியில் வெய்யிலினாலும் மழையினாலும் உண்டாகும் சிரமம் நீங்குதற்பொருட்டு நானாவிதமான குடைகளையும் வியர்வை நீங்குதற்பொருட்டு உயர்ந்த விசிறிகளையும், தோலினாலேனும் மரத்தினாலேனும் செய்யப்பட்ட மிருதுவான பாதரக்ஷைகளையும் பிராமணர்களுக்குத் தானங் கொடுப்பவனுக்குள்ள புண்ணியம் அளவிடமுடியாது.

உத்தராயண தக்ஷிணாயன புண்ணியகாலங்களில் சிவயோகீசுவரருடைய சந்நிதியில் மனைவி மைந்தரோடு நின்று யானை, குதிரை, தேர், பசு, ஆடு, இடபம், பல்லக்கு ஆகியவைகளை

மனம் வேறொன்றிற் செல்லாமல் அன்புடன் பிராமணர்களுக்குத் தானங் கொடுப்பவனுக்குள்ள புண்ணியம் அளவிடமுடியாது.

அரசனே! நீ இந்த க்ஷேத்திரத்தில் பன்னிரண்டு மாசமும் இருந்து எவ்வகைப் பிரயத்தனமுஞ்செய்து எல்லாத்தானங்களையும் செய்யக்கடவாய். மற்ற க்ஷேத்திரங்களிற் செய்யப்பட்ட புண்ணியம் அதற்குள்ள பலனை மாத்திரம் கொடுக்கும். புண்ணிய க்ஷேத்திரங்களிற் செய்யப்பட்ட புண்ணியம் ஒன்று ஆயிரமாகி அதற்குத் தகுந்த பலனைக்கொடுக்கும். காசியிற் செய்யப்பட்ட புண்ணியம் ஒன்று கோடியாகி அதற்கேற்ற பலனைக் கொடுக்கும். இந்த க்ஷேத்திரத்திற் செய்யப்பட்ட புண்ணியம் ஒன்று கோடாநு கோடியாகி அதற்குள்ள பலனைக்கொடுக்கும். சிவ க்ஷேத்திரத்தில் சரீரம் நீங்குவோர் சிவ ரூபம் பெறுவர். விஷ்ணு க்ஷேத்திரத்தில் சரீரம் நீங்குவோர் விஷ்ணு ரூபம் பெறுவர். இவ்விஷயத்தில் விசாரிக்கவேண்டுவதில்லை. இந்த க்ஷேத்திரத்தில் சரீரம் நீங்குவோர் ஸ்ரீ சிவயோகீசுவரரைத் தியானித்தலாலேயே பரப் பிரமத்தன்மை அடைவார்கள். காவேரியின் வைபவம் உபசாரமில்லை. இப்போது நான் சொன்ன விஷயம் உண்மையென்பதற்கு அக்கினியிற் பழுக்கக் காய்ச்சிய இருப்புத்துண்டத்தை நாவாற் பரிசிப்பேன். காவேரியின் வைபவத்தாலும், சூல தீர்த்தத்தின் வைபவத்தாலும், சிவயோகீசுவரருடைய மகிமையில் உபசாரமென்பது சிறிதுமில்லை. சிவயோகீசுவரருடைய மகிமையைப் படிப்பவனும், கேட்பவனும், எழுதுவோனும், அப்புத்தகத்தை வைத்திருப்பவனும் இஷ்டசித்திகளைப்பெறுவார்கள்.

சூலதீர்த்த மகிமைச் சருக்க முற்றிற்று.

---

## நாம காரணச் சருக்கம்



அதுகேட்ட தருமவருமன் என்னும் அரசன் ஆச்சரியம் பொருந்திய மனமுடையவனாகி, மேலும் அந்தத்தலமகிமையைக் கேட்க விருப்பங்கொண்டு, நாரதமுனிவரை நோக்கி, சுவாமீ!

அந்தத் தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானுக்குச் சிவயோகீசுவரர் என்னும் பெயர்வந்த காரணத்தைச் சொல்லியருளவேண்டுமென்று கேட்க; அவ்வாறு கேட்டதற்கு அரசனைப் புகழ்ந்து பாராட்டி நாரதமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

அரசனே கேள். அங்குள்ள சிவபெருமானுக்குச் சிவயோகீசுவரர் என்னும் பெயர் வந்த காரணமும் அந்தத் தலத்தின் வைபவமும் விரிவாகச் சொல்லுகின்றேன். முற்காலத்திலே சரயு நதிக்கரையில் பிராமணர் ஒருவர் இருந்தார். அவர் ஸ்ரீமான். வேதவேதாங்கங்களின் உண்மையை அறிந்தவர். நித்தியமும் அன்புடன் சிவபூசை பண்ணுகின்றவர். எப்பொழுதும் சிவநாமங்களை உச்சரிப்பதிற் கருத்துள்ளவர். தேவர்களையும் பிராமணர்களையும் பூசிக்கின்றவர். அக்கினிகோத்திர முதலியன செய்வதில் விருப்பமுள்ளவர். எல்லா யாகங்களையும் நடத்துபவர். தரும சாஸ்திரப் பொருள்களை யறிந்தவர். தினந்தோறும் அன்னதானஞ் செய்பவர். எல்லா வருணத்தாரிடத்திலும் விருப்பமுள்ளவர். விஷ்ணுசர்மா என்று யாவராலும் கொண்டாடப்பட்டவர். அவர் மனைவி பெயர் சுசீலை. அவள் யாவராலும் சிலாகிக்கத் தகுந்தவள். இல்லத்திற்குரிய நற்குண நற்செயல்களெல்லாம் நிறைந்தவள்.

அவ்விஷ்ணுசர்மா செய்யும் யாகத்துக்கு ஏழு முனிவர்களும் சகாயமாயிருந்தார்கள். அப்பொழுது அந்தப் பிராமணர், சௌனகமுனிவர் பிரமதேவரை நமஸ்கரிப்பதுபோலத், தம்முடைய யாகத்துக்கு அத்துவர்யுவாகவுள்ள விசுவாமித்திரமுனிவரை நமஸ்கரித்துப், பணிவுடன் ஒருவிஷயம் சொல்லத் தொடங்கினர். சுவாமீ! எனக்கு இதுவரை புத்திரனில்லை. நான் எவ்விதம் புத்திரப்பேற்றையடைவேன். என்று பிரார்த்திக்க; விசுவாமித்திரமுனிவர் கூறுகின்றார். விஷ்ணுசர்மாவே! உனக்குச் சமஸ்த சாஸ்திரப்பொருள்களையும் அறிந்தவராகப் புத்திரர் அவதரிப்பார்கள். இது நிச்சயம். வசிஷ்டமுனிவரைக்கொண்டு உன்னுடைய வாசபேயம் என்னும் யாகத்துக்கு அங்கமாகப் புத்திரகாமேஷ்டியைச் செய்கின்றேன். அதற்குவேண்டும் உபகரணங்களைச் சேர்த்து வைக்கக்கடவாய். என்று கூறிச் சரயுநதியின்

வடகரையில் வசிஷ்டமுனிவரை ஆசாரியராகக்கொண்டு வாசபேயம் என்னும் யாகத்தை முடித்து அதற்கு அங்கமாகப் புத்திரகாமேஷ்டியையும் செய்தார். அது முடிந்தவுடன் சிவபெருமான் அந்த யாகத்திற்றோன்றி, விஷ்ணுசர்மாவே! உனக்குப் புத்திரர் அவதரிப்பார்கள். அவர்களுள் மூத்தவன் மகாயோகியும், கீர்த்தியுள்ளவனும் சமஸ்த சாஸ்திரங்களின் உண்மைகளையும் அறிந்தவனுமாவான். அவன் சிவன் என்னும் பெயரால் அழைக்கத்தக்கவன். அவனே நான். உன்னுடைய மற்றைப் புத்திரர்களும் அஷ்டமூர்த்தி சொரூபமாயுள்ளவர்கள். உலகத்தில் கீர்த்திபெற்ற ஆண்டன்மையுடையராவார்கள். உன்னுடைய மூத்த குமாரனாகிய சிவன் என்னும் பெயருள்ள அம்முனிவனுக்கு நாம் காவேரியின் வடகரையில் பிரமன் விஷ்ணு முதலிய தேவர்கள் எப்பொழுதும் வசிக்கப்பெறுவதாய்த், திருவிடைமருதூருக்குச் சமீபத்திலுள்ள திருவியலூரென்னும் வில்வவனத்தில் பிரசன்னமாகி முத்திகொடுப்போம் என்று கூறி, மேலும் அவருக்கு வேண்டிய வரங்கள் பலவற்றைக்கொடுத்து மறைந்தருளினர்.

பின்பு விஷ்ணுசர்மா மகிழ்ச்சியுற்று, வசிஷ்டமுனிவரநுமதிப்படி விசுவாமித்திர முனிவருக்குத் தக்ஷிணையாகக் கோதானங் கொடுத்து, அவர்களோடு அக்கினிகோத்திரத்தை யெடுத்துக்கொண்டு தம்முடைய ஆச்சிரமத்துக்கு வந்து, வசிஷ்டர், விசுவாமித்திரர், சாபாலி, காசிபர் என்னும் நால்வரையும் நமஸ்கரித்து யாகதக்ஷிணை கொடுத்து அம்முனிவர்களை அனுப்பிவிட்டுப் புத்திரப்பேற்றை விரும்பிச் சிவபெருமானைத் தியானித்துக்கொண்டு பிராமணர்களுக்கு அன்னபானம் வஸ்திர முதலியவை கொடுத்து உபசரித்துவரப், பன்னிரண்டா மாசத்தில் அவருக்கு அவருடைய மனைவியாகிய சுசீலையென்பவளிடத்தில் எட்டுப் புத்திரர் அவதரித்தார்கள். அவர்கள் அவதரித்தது கிருதயுகமாகும். அவர்கள் அஷ்டமூர்த்தி சொரூபமாயுள்ளவர்கள். நல்லவர்கள். அவர்களுள் மூத்தவர் சிவனென்னும் பெயர் உள்ள யோகி. பெருந்தவமுடையவர். அவர் பிரமசரியாச்சிரமத்திலிருக்கும்பொழுது சாஸ்திரங்களெல்லாவற்றையும் அத்தியயனம் பண்ணிச் சந்நியாசம் பெற்றுக்கொண்டு, குருவோடு பூமிப்பிரதக்ஷிணஞ் செய்பவராய்க், காவேரிக்கரையை அடைந்து, அங்கு

ள்ள முனிபுங்கவர்களைக்கண்டு க்ஷேமம் விசாரிக்க; அவர்களும் சிவயோகியாரை நமஸ்கரித்து க்ஷேமம் விசாரித்து இருந்தார்கள். அந்தச் சமயத்தில் மார்க்கண்டேயர், பரத்துவாசர், சாபாலி, காசிபர், அகஸ்தியர், கண்ணுவர், கௌதமர், அங்கீரசர், கவுண்டினியர், சமதக்கினி, உரோமபாதர் என்னும் முனிவர்களும், மற்றும் பிரசித்திபெற்ற முனிவர்களும் சிவயோகியாரைத் தரிசிக்க விரும்பி, விரைந்து திருவிடைமருதூருக்கு வந்துசேர, சிவயோகியாரும் அவர்களைக் கண்டு மகிழ்ச்சியடைந்து ஆசனத்தினின்றும் எழுந்து ஆலிங்கனம்செய்துகொண்டு க்ஷேமம் விசாரித்து, அவர்களாற் பாராட்டப்பெற்றவராய், அவர்களோடு தர்ப்பாசனத்திலிருந்து, அவர்கள் கொடுத்த பழங்களையும் கிழங்குகளையும் அருந்தியபின், அகஸ்தியமுனிவரை நோக்கிச் சொல்லத்தொடங்கினார்.

முனிபுங்கவரே! நீர் இங்குவந்தது எனக்கு மிகச்சந்தோஷம். நான் இந்தக் காவேரிக்கரையிலேயே வசிக்கவேண்டுமென்று வந்தேன். அதற்குத் தகுந்த இடம் யாது? ஆலோசித்துச் சொல்லவேண்டுமென்று கேட்க, அகஸ்தியமுனிவர் அவருடைய வாக்கைச் சிரமேற்கொண்டு, சிவயோகியாரே! உம்முடைய ஜனனமும், சகோதரர்களின் ஜனனமும், உம்முடைய வாசஸ்தானமும், மற்றும் எல்லா விஷயங்களும் முன்பே என்னால் அறியப்பட்டன. தேவரீர் வந்து அவதரித்தமையால் முனிவர் கூட்டமும் மூன்றுலகங்களும் பரிசுத்தமடைந்தன. சிவபெருமானுடைய மகிமையும் உம்முடைய மகிமையும் சமமாகும் என்று கூறி, ஒரு முகூர்த்த காலம் மௌனமாயிருந்து சொல்லுகின்றார். சுவாமீ! காவேரியின் வடகரையில் புராதனபுரமென்னுந் திருவியலூரில் தன்னையடைந்தவர்களுடைய சிரமங்களை நீக்கத்தக்க விஷ்ணுவாச்சிரமம் ஒன்று இருக்கிறது. அவ்விடத்திலேயே எப்பொழுதும் வாசஞ்செய்தருளும். அங்கேயே உம்முடைய தவம் சித்தியடையும் என்று கூற; அது கேட்ட சிவயோகி முனிவர் அந்த ஸ்தானத்துக்குப் புராதனபுரம் என்று பெயர்வந்த காரணம் யாது? என்று கேட்க; அகஸ்தியமுனிவர் சொல்லத் தொடங்கினார்.

சுவாமீ! பூமியில் எல்லா க்ஷேத்திரங்களும் தோன்றுதற்கு முன்பே இந்த க்ஷேத்திரம் தோன்றிச் சிவபெருமானுக்கும்

விஷ்ணுமூர்த்திக்கும் விருப்பமுள்ளதாயிருத்தலால் இதற்குப் புராதனபுரம் என்று பெயர் வழங்குகின்றது. மற்றொரு காரணமுஞ் சொல்லுகிறேன் கேளும். முற்காலத்தில் புராதனன் என்னும் இராக்ஷதன் ஒருவன் அந்த ஸ்தலத்தில் அநேக இராக்ஷதர்களோடு வசிப்பவனாய் அங்குள்ள முனிவர்களின் சற்கருமங்களுக்கு இடையூறு செய்துவர, அவர்களெல்லாம் அவனால் பீடிக்கப்பட்டு அக்கினிகோத்திர முதலியவற்றையும் இழந்து நித்தியமும் வருத்தமடைந்திருந்தார்கள். இது நிற்க.

அயோத்தியாபுரியில் காகுஸ்த வமிசத்திற் பிறந்த தசரத சக்கரவர்த்தியென்பவர் மூன்றுலகங்களிலும் பிரசித்திபெற்றவர். அவருடைய புத்திரர் இராமர். அவர் சமஸ்த தருமசாஸ்திரப் பொருள்களையும் அறிந்தவர். அவர் பிதாவின் ஆஞ்ஞையை மேற்கொண்டு, சடாமண்டலத்தையுடையவராய், மரவுரியாகிய வஸ்திரத்தைத் தரித்து, கையில் வில்லை ஏந்திக்கொண்டு, இலக்குமணராகிய தம்பியால் பின்தொடரப்பட்டு, விளங்குகின்ற பராக்கிரமசாலியாய்ச், சீதையோடு அங்கேவர, அதுகண்ட முனிவர்கள் எல்லா வுலகத்தாராலும் அடைக்கலம் புகத்தக்க அவரைச் சரணமடைந்தார்கள். அப்பொழுது இராமபிரான் அவர்களுக்குக் கிருபைசெய்து, முனிவர்களே! நீங்கள் பயப்படவேண்டாம். இந்தத் தண்டகாரணியத்தில் இராக்ஷதர்களால் உங்களுக்கு உபத்திரவமுண்டென்பது எனக்கு முன்பே தெரியும். உங்களுக்கு உபத்திரவஞ்செய்துகொண்டிருக்கிற புராதனன் என்னும் இராக்ஷதனைக் கொல்வதற்கு நான் விரும்புகின்றேன். இது சத்தியம். நீங்கள் உங்களுடைய நித்திய கர்மானுஷ்டானங்களைச் செய்துகொண்டிருங்கள் என்று கூறியருளி, உடனே சபதஞ்செய்து, கையில் வில்லையெடுத்துக்கொண்டு, இலக்குமணரோடு சென்று, அந்த இராக்ஷதனைக் கொன்று, முனிவர்களுக்கு அபயப்பிரதானங்கொடுத்து அங்குள்ள சிவயோகீசுவரரையும் விஷ்ணுமூர்த்தியையும் பூசித்துத் தோத்திரஞ்செய்து அநேக வரங்களைப் பெற்றுக்கொண்டு, பின்பு சீதையைப் பிரிந்து, சுக்கிரீவனோடு சிநேகஞ்செய்து, சமுத்திரத்தில் அணைகட்டிச்சென்று, இலங்கையை அடைந்து இராவணனுடைய புத்திரர்களையும் சேனைகளையும் வாகனங்களையும் அழித்து, அவனையும் யுத்தகளத்திற் கொன்று,

அந்த இராச்சியத்தை விபீஷணருக்குக் கொடுத்துச், சீதையை மீட்டுக்கொண்டு, புஷ்பக விமானத்தில் ஏறி ஆகாயமார்க்கமாய் இலக்குமணர் முதலானவர்களோடு அயோத்தியாபுரியை அடைந்து உலக முழுதையும் ஆண்டுவந்தார்.

சில காலஞ் சென்றபின், ஸ்ரீராமபிரான் அந்தத்தலத்தை யடைந்து, சிறந்த பூசோபகரணங்களைக்கொண்டு சிவயோகீசுவரரைப் பூசைசெய்து, அவருக்கு ஐப்பசி மாசத்தில் மகோற்சவமும், அவ்வாறே அங்குள்ள விஷ்ணுமூர்த்திக்குச் சித்திரை மாசத்தில் மகோர்சவமும் நடத்தி, அவருக்குத் தென்பாகத்தில் காவேரியின் மணல்மேட்டில் விஷ்ணுமூர்த்தியை சங்கு சக்கரம் வரதம் அபயம் பொருந்திய நான்கு திருக்கரங்களையுடையவராகவும் சீதேவி பூதேவி சமேதராகவும் பிரதிஷ்டித்து வாசுதேவர் என்று பெயரிட்டுப் பூசைசெய்தார். அதற்குத் தென்பாகத்தில் சீதாதேவியார் இலக்குமியைப் பிரதிஷ்டை பண்ணிப் பூசித்தார். அதன்பின் ஸ்ரீராமபிரான் அவ்வாசுதேவமூர்த்திக்குப் பக்கத்தில் வில்வமரம் வைத்துத் தினந்தோறும் நீர்வார்த்து வளர்த்து அவருக்குத் தை மாசத்தில் உர்சவமும் நடத்திச் சீதாபிராட்டியாரோடு பூசை பண்ணிக்கொண்டு வந்தார். ஆதலால் இந்த க்ஷேத்திரத்தைத் தேவர்களும் முனிவர்களும் பாராட்டுகின்றார்கள். நீர் இந்த க்ஷேத்திரத்திலேயே எப்பொழுதும் சிவசந்நிதானத்தில் இருக்கவேண்டும். இந்த க்ஷேத்திரம் தானே பிரகாசிக்குந் தன்மையுள்ளது. இது எல்லா க்ஷேத்திரங்களுக்கும் முன்னே தோன்றினமையாலும் புராதனன் என்னும் இராக்ஷதன் இங்கே வசித்து இறந்து முத்தியடைந்தமையாலும் புராதனபுரம் என்று வழங்கப்பெறுகின்றது. இந்த க்ஷேத்திரத்தின் மகிமை பிரமதேவனும் சொல்லமுடியாது. இந்தத் தலத்தில் சிவபெருமானும் விஷ்ணுமூர்த்தியும் எல்லாத் தேவர்களோடும் எப்பொழுதும் வீற்றிருக்கின்றார்கள். ஸ்ரீராமபிரான் இங்குள்ள சிவபெருமானையும் விஷ்ணுமூர்த்தியையும் பூசை பண்ணிக்கொண்டு அனுமானால் பூசிக்கப்பட்டவராய் சீதை இலக்குமணர் முதலானவர்களோடு வீற்றிருக்கின்றார். நீர் இந்தத் தலத்திலேயே இருக்கவேண்டுமென்று என் மனம் விரும்புகிறது என்று கூறச்; சிவயோகியார் அத் திருவிடைமருதூரிலுள்ள காருண்யாமிர்த தீர்த்தத்தில்

ஸ்நானஞ்செய்து, பார்வதி சமேதராயும் மருதமரத்தி னடியில் வீற்றிருப்பவராயும் உள்ள ஸ்ரீமருதீசுவரரை நமஸ்கரித்து, அப் பெருமானிடத்தில் திருவருள் பெற்றுக்கொண்டு, வில்வாரணியத் தையடைந்து ஸ்ரீசிவயோகீசுவரரைத் தவத்தால் ஆராதித்துச் சகோதரர்களோடு அந்த லிங்கமூர்த்திக்குட்பிரவேசித்தார். அந்த லிங்கமூர்த்தியின் உச்சியில் இப்பொழும் அவர்களுடைய சடை காணப்படுகிறது. சிவயோகி என்பவர் அந்த லிங்கமூர்த்திக்குட் பிரவேசித்தமையால் அந்த மூர்த்திக்கு அவருடைய பெயரால் சிவயோகீசுவரர் என்னும் பெயர் தேவர்களாலும் மனிதர்களா லும் வழங்கப்படுகின்றது. இந்தத் தலம் மிக மேலானதாகும்.

நாம காரணச் சருக்க முற்றிற்று.

---

## இலக்குமண விசயச் சருக்கம்.



தருமவருமன் என்னும் அரசன் அந்த ஸ்தலத்தில் எழுந் தருளியிருக்கின்ற இலிங்கமூர்த்திக்குச் சிவயோகீசுவரர் என்னும் பெயர் வந்த காரணமும், ஸ்ரீராமபிரான் புராதனன் என்னும் இராக்ஷதனைச் சங்கரித்தமையும், சிவயோகி முனிவர் முத்திய டைந்தமையும் கேட்டு, மறுபடியும் அந்தத்தலமகிமையைக்கேட்க விருப்பமுற்று, நாரதமுனிவரை நோக்கி சுவாமீ! ஸ்ரீராமபிரான் புராதன இராக்ஷதனை இன்னபடி சங்கரித்தார் என்பதும், சிவ யோகி முனிவர் சகோதரர்களோடு இன்னவிதம் இலிங்கமூர்த் திக்குட் கலந்தருளினர் என்பதும், உள்ளபடி விரித்துச் சொல் லியருளவேண்டுமென்று பிரார்த்திக்க, நாரதமுனிவர் சொல்லத் தொடங்கினர்.

அரசனே கேள். புராதனன் என்னும் இராக்ஷதன், ஸ்ரீராமபிரான் இலக்குமணன் என்னும் இருவர்களோடு யுத்தஞ் செய்ததும் மற்றும் விஷயங்களும் சொல்லுகின்றேன். முற்காலத் திலே தண்டகாரணியத்தில் புராதனன் என்னும் இராக்ஷதன் அங்குள்ள முனிவர்களை எப்பொழுதும் துன்பப்படுத்திவந்தான். அப்பொழுது தமது பிதாவின் ஆஞ்ஞையால் ஸ்ரீராமர், சீதா

தேவியாரும் இலக்குமணரும் கூடவர, அவ்வனத்துக்கு வந்தார். அது தெரிந்து அங்குள்ள முனிவர்களெல்லாம் புராதனவிராக்ஷதனால் விளையும் உபத்திரவங்களை நீக்கியருளவேண்டுமென்று அவரைச் சரணமடைந்தார்கள். ஸ்ரீராமர் அவர்களுக்கு அபயங்கொடுத்து அந்த இராக்ஷதனைக் கொல்லுகிறேனென்று பிரதிஞ்ஞை செய்தார். அதுகேட்ட முனிவர்கள் மகிழ்ச்சியடைந்து தங்களுக்குரிய அக்கினிகோத்திரங்களையும் மற்றும் ஸ்மார்த்த கருமங்களையும் நடத்திக்கொண்டு இராக்ஷத பயமில்லாதவர்களாய்த் தவஞ்செய்துகொண்டிருந்தார்கள்.

அதுகண்ட புராதனவிராக்ஷதன், முனிவர்களிடம் கோபங்கொண்டு, அவர்களுக்கு இடையூறு செய்யக்கருதித், தன்னுடைய வேலைக்காரர்களையனுப்ப, குரூரமான முகத்தையுடைய அந்த இராக்ஷதர்கள், முனிவர்கள் செய்யும் அக்கினிகோத்திரங்களைப் புராதனனுடைய ஆஞ்ஞையின்படியே எவ்விடங்களிலும் அநேகதரம் ஜலங்களால் அவித்தார்கள். மலமூத்திரங்களையும் அவற்றில் விடுத்தார்கள். நித்தியமும் தேவர்களுக்குக் கொடுக்கின்ற அவிப்பாகங்களைப் பறித்து உண்டார்கள். யாகத்தின் பொருட்டு யூபஸ்தம்பத்திற் கட்டப்பட்ட பசுக்களை இழுத்துச் சென்று வாளால்வெட்டி யாகாக்கினியில் வதக்கியுண்டார்கள். முனிவர்களுக்கெதிரே அவர்களுடைய மனைவிமார்களையும், புத்திரர்களையும் தண்டமுதலியவற்றால் நித்தியமும் அடித்தார்கள். அம்முனிவர்களையும் அடித்தார்கள்.

இவ்வாறு புராதனவிராக்ஷதனால் வருத்தமடைந்த முனிவர்கள், சர்வலோகசரணியராய் இலக்குமணரோடு அங்கு வந்திருக்கிற ஸ்ரீராமபிரானிடத்து மீண்டும் சரணமடைய, ஸ்ரீராமபிரான் இராக்ஷதபயத்தால் நடுங்கி நிற்கின்ற அவர்களைப்பார்த்து, முனிவர்களே! பயப்படாதீர்கள் என்று சொல்லி அவர்களுடைய வருத்தத்தைத் தணித்து, உடனே வில்லையெடுத்து வளைத்து நாணோசையால் எட்டுத்திக்குகளையும் நிறைத்துக், கோபத்தோடு வேகமாக ஒரு பாணத்தைப் பூட்டி, அசுரர்கள் மேல்விட, அது கருடன் பாம்புகளின்மேற் செல்வது போலச்சென்று அவர்களையெல்லாம் கொன்றது. புராதனவிராக்ஷதன் இராமபாணத்தால்

இறந்து கிடக்கின்ற அசுரர்களையெல்லாம் பார்த்து வருத்தமுற்று இரதத்தின்மேல் ஏறி யுத்தத்திற்குப் புறப்பட்டு வந்தான். சூலாயுதத்தையும் வில்லையும் பிடித்த கைகளையுடைய நாற்பதினாயிரம் இராக்ஷத வீரர்கள் அவனோடு வந்தார்கள். அவனுடைய மந்திரியாகிய விரூபாக்ஷன் என்பவன் கல்லும் மரமும் ஏந்திய கைகளையுடைய பதினாலாயிரம் பதாதிகளோடு வந்தான்.

முன் சொல்லப்பட்ட அந்தச்சேனைகளெல்லாம் இராமபிரான்மேல் கல்மழையைப் பொழிந்தார்கள். சாலம் பனை முதலிய மரங்களையும் எறிந்தார்கள். ஸ்ரீராமர் அவர்கள் விடுத்த கற்களையும் மரங்களையும் பாணங்களால் இலகுவில் தொலைத்துப், பின் வாய்வ்வியாஸ்திரத்தை விட்டு அவர்களையெல்லாம் கொன்ருர். தூமிராக்ஷன் பீமகர்மன் என்று பிரசித்திபெற்ற அசுரர்களையும் விழுத்தினுர். அவற்றையெல்லாம் பார்த்துப் புராதன விராக்ஷதனுடைய மந்திரியாகிய யமவைரியென்னும் வீரன், குதிரையின்மேல் ஏறிக்கொண்டு யுத்தகளத்தையடைந்து, தன்சேனைகளாகிய இராக்ஷதர்களும் போர் செய்யத், தான் சூலாயுதத்தையெடுத்துச் சுழற்றி உபத்திரவஞ்செய்து நின்ருன். அதுகண்ட இலக்குமணர் கோபங்கொண்டு அவன்மேல் பாணங்களை மழைபோலச்சொரிய, இராக்ஷதன் அவைகளையெல்லாம் பாணங்களால் தடுத்து, மேலும் பாணங்களைச் சொரிந்தான். அதுகண்ட இலக்குமணர் வாய்வ்வியாஸ்திரம் விடுத்து அவன் ஏவிய பாணங்களைச் சுலபமாகத்தடுத்து, மேலும் இராக்ஷதர் கூட்டத்திற் பாணங்களைப் பிரயோகித்து, ஒரே சமயத்தில் அவர்களுடைய கால்களையும் கைகளையும் ஆயுதங்களையும் வெட்டித்தள்ளினுர். உடனே, யமவைரியென்பவன் இலக்குமணருடைய யுத்தத்திறமையைக் கண்டு கோபங்கொண்டு, ஆயிரம் பாரம் என்னுங் கனமுள்ளதாயும், கட்டப்பட்ட நூறுகண்டாமணிகளின் ஒலியையுடையதாயும், பத்துத்திக்கிலும் நெருப்புப் பொறி பறப்பதாயும், பகைவர்களுடைய வலிமையைக்கெடுப்பதாயும், இரும்பினுற் செய்யப்பட்டதாயும் உள்ள ஒரு சூலாயுதத்தை விட, இலக்குமணர் அதை இலகுவில் துணித்துப், பின் ஒரு பாணத்தால் அவனுடைய குதிரையைக் கொன்று, இரண்டு பாணத்தால் அவனுடைய தலையை வெட்டித் தள்ளினுர்.

அதுகண்ட மற்ற இராக்ஷசர்களெல்லாம் வேகமாய் ஓடி, மகாகர்ணன் என்னும் சேனுதிபதியையும், அவனுடைய தம்பியாகிய சாமலோசனன் என்பவனையும் சரணமடைந்து, எங்களைக் காத்தருளும் காத்தருளும் என்று வேண்டிக்கொள்ள, அவ்விருவரும் அந்த இராக்ஷதர்களோடு யுத்தகளத்திற்கு வந்தார்கள். சூலம் குந்தம் என்னும் ஆயுதங்களைக் கையில் ஏந்தி, கோபாக்கினி சொலிக்க, புலியின்மேலும் யானையின்மேலும் ஏறிக்கொண்டு அக்கினிக்குமுன் கொசுகு போல வருகின்ற அவ்விருவர்களையும் பார்த்து, இலக்குமணர் கோபங்கொண்டு இரண்டுபாணங்கள் விடுத்து அவ்விருவரையுங் கொன்று, அவர்கள் ஏறிவந்த புலிக்கு ஒரு பாணமும் யானைக்கு ஒரு பாணமும் விடுத்து அவற்றையுங்கொன்று, அநேக பாணங்கள் விடுத்து இராக்ஷதர்களையெல்லாம் கொன்ருர்.

அதுகண்ட புராதனவிராக்ஷதன், தான் தேரில் ஏறியிருந்தபடியே சேனைகளெல்லாம் அழிந்தமையைக்கண்டு ஆச்சரியமடைந்து, சாரதியை நோக்கி, நீ இராமன் நிற்குமிடத்திற்குச் சீக்கிரம் தேரைச் செலுத்தக் கடவாய் என்று ஆஞ்ஞாபித்து, இலக்குமணர்மேல் அநேகபாணத்தைவிட, அவைகளால் தாக்கப்பட்ட இலக்குமணர், அவ்விராக்ஷதன்மேல் அநேகபாணங்களைப் பிரயோகிக்க, அவன் அவற்றையெல்லாம் தன்னுடைய பாணங்களால் தடுத்துத் துன்பம் விளைவிக்க, இலக்குமணர் புராதனவிராக்ஷதனை நோக்கி, மகாவீரியமுள்ளவனே! கீர்த்திபெற்ற ஆண்டன்மையுடையவனே! சௌரிய தைரிய பராக்கிரமங்களிஞலே இவ்வுலகத்தில் உனக்குச் சமானம் ஒருவருமில்லை. நீ நன்ருக யுத்தம் செய்பவனுக இருக்கிருய். இன்னும் உன்னுடைய வீரத்தன்மையை நான் தெரிந்துகொள்ளுதற்பொருட்டு ஓர் உத்தமமான ஆக்கினேயாஸ்திரம் விடுகின்றேன். அதைச்சகித்துக்கொள்வாய் என்று சொல்லிக் கோபம் பொருந்திய கண்களையுடையவராய் ஒரு பாணத்தை வில்லிற்பூட்டி ஆக்கினேயாஸ்திர மந்திரஞ்செபித்து விடுக்கப், புராதனவிராக்ஷதன் அதுகண்டு கோபங்கொண்டு வாருணுஸ்திரத்தை விடுத்து அழிக்க, அதுகண்ட இலக்குமணர், பிரமாஸ்திரம், இந்திராஸ்திரம், வாயவ்வியாஸ்திர முதலியவற்றை இராக்ஷதன்மேல் விடுத்து, அவனைத்

துன்பப்படுத்தி, மேலும் ஒரு பாணத்தால் சாரதியையும், நான்கு பாணங்களால் இரதத்திற் பூட்டப்பட்ட குதிரைகளேயும் கொன்று, மற்றும் ஒரு பாணத்தால் கொடியை அறுத்து, அநேக பாணங்களால் இரதத்தையும் பூமியில் விழுத்தப், புராதனவிராக்ஷதன் இரதம் இல்லாதவனுயிருந்தும் அநேக பாணங்கள் விடுத்து இலக்குமணரை வருத்திப் பலவித மாயைகளால் மோகிக்கும்படி செய்தான்.

அவ்விருவர் செயலேயும் ஆகாயத்தினின்று பார்த்துக்கொண்டிருந்த தேவர்கள், இலக்குமணர் நிலமையைக்கண்டு பயந்து, சர்வலோக சரணியராயும் சரணமடைந்தவரிடத்திற் பிரியமுள்ளவராயுமிருக்கிற ஸ்ரீசிவயோகிநாதரை யடைந்து, சுவாமீ! புராதனனென்னும் இராக்ஷதன் பல மாயைகள் செய்து இலக்குமணரை மயக்கிவிட்டான். அந்த மாயையை நீக்கிக்கொள்ள இலக்குமணரிடத்தில் வன்மையில்லே. அந்த இராக்ஷதன் மாயைகளெல்லாவற்றிலும் தேர்ந்தவனுதலால் உலகமுழுதும் வென்றுவிடுகின்றுன். மாயையை நீக்குதற்குத் தேவர்களுள் உம்மையல்லாமல் ஒருவரும் இல்லே. அவ்வசுரனுடைய மாயாபலத்தைச் செயிப்பதற்கு ஓர் உபாயம் விதித்தருளவேண்டும் என்று பிரார்த்திக்க; சிவபெருமான் அத்தேவர்கள் பின்ருெடர்ந்துவர, இராமரும் இலக்குமணரும் நிற்கின்ற யுத்தகளத்தை யடைந்தார். உடனே, ஸ்ரீராமர் இடபவாஹனத்தின்மேல் பார்வதிசமேதராய் எழுந்தருளி நிற்கின்ற சிவபெருமானே நோக்கித் தோத்திரஞ்செய்து, சுவாமீ! தேவரீருடைய திருவடி தரிசனம் கிடைக்கப்பெற்றமையால் நான் செய்த தவம் பரிசுத்தமாயிற்று. நானும் தன்னியனுனேன். திருவருளுக்குப் பாத்திரமானேன். மகிழ்ச்சியடைந்தேன். தேவரீர் எழுந்தருளிவந்தமையால் இவ்விராக்ஷதன் இப்பொழுதே என்னுல் வெல்லப்பட்டான் என்பது நிச்சயம் என்று கூற; சிவபெருமான், இராமனே! இந்த இராக்ஷதன் நம்முடைய கிருபையால் முன்பு அநேக மாயைகளேப் பெற்றுக்கொண்டான். நமது திருவருளில்லாமல் இவனே வெல்ல முடியாது. இவனே வெல்லுவதற்கு ஓர் உபாயம் கூறுகின்ருேம். அஃதாவது வச்சிரபஞ்சரம் என்று பெயருள்ள ஒரு திவ்வியமான கவசம் இருக்கிறது. அது இஷ்டசித்திகளெல்லாம் கொடுப்பது. எல்லா நன்

மைகளையும் தரத்தக்கது. அதனை நீ பரிசுத்தமுடன் மூன்று தரம் ஆசமனம் பண்ணி, உன் சகோதரனாகிய இலக்குமணனோடு மன் அமைவாக உபதேசம் பெற்றுக்கொள்ளக்கடவாய். அதற்கு இருடி பிரமதேவர். சந்தசு அநுஷ்டுப்பு. அதிதேவதை விஷ்ணு மூர்த்தியாகும்.

## கவசம் வருமாறு.

என் சிரசைக் கேசவன் காக்க. முகத்தை நாராயணன் காக்க. நெற்றியை மாதவன் காக்க. கண்களைக் கோவிந்தன் காக்க. காதுகளை விஷ்ணு காக்க. வாயை மதுசூதனன் காக்க. நாசியைத் திரிவிக்கிரமன் காக்க. கன்னங்களை வாமனன் காக்க. நாவைச் சீதரன் காக்க. அதரங்களை இருடிகேசன் காக்க. மேவாயைப் பத்மநாபன் காக்க. பற்களைத் தாமோதரன் காக்க. கண்டத்தைச் சங்கருஷணன் காக்க. மார்பை வாசுதேவன் காக்க. தோள்களைப் பிரத்தியும்நன் காக்க. கைகளை அநிருத்தன் காக்க. என் பின்பாகத்தை எப்பொழுதும் புருஷோத்தமன் காக்க. என்னுடைய இரண்டு பக்கங்களையும் அதோக்ஷசன் காக்க. வயிற்றை நரசிங்கமூர்த்தி காக்க. இடையை அச்சுதன் காக்க. நாபியைச் சனார்த்தனன் காக்க. இரண்டு தொடைகளையும் இரண்டு கணைக்கால்களையும் உபேந்திரன் காக்க. இரண்டு கால்களையும் அரி காக்க. என்னுடைய எல்லா அங்கங்களையும் கிருஷ்ணன் காக்க. தேவேசன் எனக்கு எப்பொழுதும் விசயத்தைக் கொடுக்குக. என்னும் பொருளுடைய கவசமந்திரத்தை முற்காலத்தில் நான் செபித்துத் திரிபுர அசுரர்களை வென்றேன். உலகத்தில் யாவராலும் பூசிக்கப் படுந்தன்மையையும் அடைந்தேன் என்று கூறி, அவர்களுக்கு அந்தக்கவச மந்திரத்தை உபதேசித்து, வேண்டிய வரங்களைக் கொடுத்து மறைந்தருளினார்.

உடனே, இலக்குமணர் அந்தக்கவச மந்திரத்தைச் செபித்து, இராமபிரானிடத்தில் அநுமதி பெற்றுக்கொண்டு, யுத்தஞ் செய்யத்தொடங்கிக் கவசமந்திரப் பிரபாவத்தால் புராதனவிராக்ஷதனுடைய மாயையைத் தொலைத்து, அவனை நோக்கிக் கோபத்தாற் கண்கள் சிவந்து, இராக்ஷதனே! நீ இதுவரை எங்கேயிருந்தாய்? எனக்கு எதிர்ப்பட்டும் உயிரோடிருக்க விரும்புகின்

ஞயோ. என்னுடைய பெரிய வீரத்தன்மையையும் கர லாகவத்தையும் இப்பொழுது நீ பார். இரதத்தின்மேல் நிற்கின்ற உன்னை ஒரே பாணத்தாற் கொல்லுகின்றேன் என்று கூறி, ஸ்ரீராமபிரானையும் சீதாதேவியையும் நமஸ்கரித்துக்கொண்டு, தம்முடைய வில்லில் பாசுபதாஸ்திரத்தைப் பூட்டிவிட, அது யமனையும் கொல்லத்தக்கதாய், உலகங்களுக்கெல்லாம் பயத்தைச் செய்வதாய்ப், பிரளயாக்கினிபோல வந்தது. புராதன ராக்ஷதன் அவ்வஸ்திரத்தையும் இலக்குமணரையும் பார்த்துவிட்டு, ஸ்ரீராமபிரானை நோக்கி, இவர் மனிதர் அல்லர்; விஷ்ணுமூர்த்தியேயாகும். இங்கு நிற்கின்ற சீதை இலக்குமியே. இலக்குமணர் ஆதிசேடனே. பரதர் பாஞ்சசன்னியம் என்னுஞ் சங்கே. சத்துருக்கனர் சக்கராயுதமே. விஷ்ணுமூர்த்தியே இராவணனைக் கொல்லுதற்பொருட்டு மனிதவடிவங்கொண்டு ஸ்ரீராமனென்னும் பெயருடன் அவதரித்திருக்கின்றார். இல்லாவிடில் இவ்வளவு வலிமையும் வீரமும் மனிதர்களுக்கு எப்படி யுண்டாகும். நான் ஸ்ரீராமபிரான் சீதாபிராட்டியார் ஆகிய இவர்களுடைய சந்நிதியில் நிற்பதால் தன்னியனுகவும் அநுக்கிரகஞ் செய்யப்பட்டவனுகவும் ஆனேன். எனக்கு இப்பொழுது இலக்குமணரால் வதம் கிடைப்பதாக விருத்தலால், அது முத்திசாதனமும் பரிசுத்தமுமாகும் என்று தன் இறப்பை நிச்சயித்துக்கொண்டு நிற்கும்பொழுது, இலக்குமணரால் விடுக்கப்பட்ட அவ்வஸ்திரம் அவனுடைய மார்பைப் பிளந்து பிராணனைக் கிரகித்துக்கொண்டு சென்று, பாதாள கங்கையில் ஸ்நானம் பண்ணி, அவருடைய அம்பராத்தூணியை அடைந்தது.

இவ்வாறு புராதன ராக்ஷதன் இறந்தவுடன், இந்திரன் முதலிய தேவர்களெல்லாம், விளங்குகின்ற பராக்கிரமத்தையுடைய இலக்குமணரை மிகவும் புகழ்ந்தார்கள், ஆகாயத்திலிருந்து கற்பகப்பூமழை பொழிந்தது. தேவகணங்கள் தோத்திரம் பண்ணினார்கள். தேவதுந்துபிகள் முழங்கின. தெய்வப் பெண்களெல்லாம் நடனஞ் செய்தார்கள். தண்டகாரணியத்திலுள்ள முனிவர்களெல்லாம், நல்ல காரியம் நல்ல காரியம். நீர் கூறிய சத்தியத்தைக் காப்பாற்றிவிட்டீர் என்று ஸ்ரீராமபிரானைத் தோத்திரஞ் செய்து சிலாகித்தார்கள். ஸ்ரீராமபிரான் ஆனந்தமேலீட்டால் இலக்குமணரைக் கட்டித்தழுவி, மூன்றுலகங்களாலும்

வெல்லமுடியாதவனும், கெட்ட காரியங்களைச் செய்பவனும், நம்மாலும் கொல்லமுடியாதவனும் உள்ள இராக்ஷதன் உன்னாற் கொல்லப்பட்டான். இவனைக் கொல்லுகிறேனென்று என்னாற் செய்யப்பட்ட பிரதிஞ்ஞையை நீயே முடித்தவனாகின்றாய் என்று கூறித், தம்முடைய மடியின்மேல் வைத்து உச்சி மோந்து சரீரத்தைத் தடவி மகிழ்ச்சியடைந்தார். புராதனவிராக்ஷதன் ஸ்ரீராமபிரானுடைய வாக்கின்படி வைகுண்டலோகம் போய்ச்சேர்ந்தான். அவர் அவனுக்குக்கொடுத்த வரத்தின்படி இந்த க்ஷேத்திரத்தில் எல்லாத் தேவர்களும் வசிக்கின்றார்கள். எல்லாத் தீர்த்தங்களும் இங்கே இருக்கின்றன. சிவயோகீசுவரருடைய சந்நிதியில் புராதனவிராக்ஷதன் இறந்தமையால் அவனுடைய பெயரால் இந்த க்ஷேத்திரம் புராதனபுரம் என்று வழங்கப்பெறுகின்றது.

இலக்குமண விசயச்சருக்க முற்றிற்று.

---

## புராதனன் பூர்வவிருத்தாந்தச் சருக்கம்.



தருமவருமராஜன், புராதனராக்ஷதன் இந்த ஸ்தலத்தில் இறந்து வைகுண்டபதவியடைந்தமை கேட்டு, அவன் எப்படிப் பதவி பெற்றான்? ஸ்ரீராமபிரான் பின்பு இந்த ஸ்தலத்திலிருந்து என்ன செய்தார்?. அவற்றைக் கூறியருளவேண்டுமென்று கேட்க, நாரதமுனிவர் சொல்லத்தொடங்கினார்.

அரசனே கேள். நீ இப்பொழுது கேட்டபடியே முற்காலத்தில் சிவயோகிமுனிவர் அகஸ்தியமுனிவரைக் கேட்க, அவர் அங்கு எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானுடைய மகிமையையும் விஷ்ணுமூர்த்தியுடைய மகிமையையும் அவருக்குக் கூறினார். அவ்வாறே நாம் உனக்குச் சொல்லுகின்றோம். முன்பு புராதன ராக்ஷதன் இறந்தவுடன் தன் உடலைவிட்டுத் திவ்யதேகம் பெற்றுச் சங்கு, சக்கரம், கதை என்பவைகளைத் தரித்தவனாய், தேவவிமானத்தில் இருந்துகொண்டு ஸ்ரீராமபிரானுக்குத் தன்னுடைய பூர்வ விருத்தாந்தத்தைச் சொல்லத் தொடங்கினான்.

சுவாமீ! நான் முற்பிறப்பில் கந்தருவன். புட்பதந்தன் என்பவனுக்குத் தமையன். பலசாலி. குசுமாக்ஷன் என்னும் பெயரு

டையவன். தேவர்களால் கொண்டாடப்பட்டவன். அப்படிப்பட்ட நான் காமம் அதிகரித்து, நந்தனவனத்தில் அரம்பையென்னும் தெய்வப்பெண்ணோடு கூடிக் கிரீடையில் மிகப்பற்றிய மனமுள்ளவனாய், யாதொரு கவலையுமின்றி வெகுகாலம் சுகித்திருந்தேன். அந்த அரம்பையென்பவள் தேவதாசியாதலால், இந்திரனுடைய சபைக்கு அடிக்கடி போய்வரக் கடமைப்பட்டிருந்தும், என்னை விட்டுப்பிரிதற்கு மனமில்லாமல் நெடுநாள் என்னுடன் இருந்துவிட்டாள். எங்கள் இருவர் செயலையும் அறிந்த இந்திரன், எங்களைக் கூட்டிவரச்சொல்லி ஆளனுப்பினான். அப்பொழுது நான் அவனுடைய ஆஞ்ஞையை உல்லங்கனம் பண்ணிவிட்டு, அரம்பையோடிருக்கத் துணிந்தேன். அவள் அவனுடைய ஆஞ்ஞைக்குப்பயந்து இந்திரனிடஞ்சென்று வணங்கி, சுவாமீ! அடியேன் மன்மதபாணத்தாற் பீடிக்கப்பட்டிருந்துவிட்டேன். கிருபாநிதியே! என்னைக்காத்தருளும். அடியேன் செய்த குற்றத்தைப் பொறுத்தருளவேண்டும் என்று பிரார்த்தித்தாள். இந்திரன் அவள்பாற் கோபந்தணிந்து, தன் சபைக்கு வாராத என்னிடம் கோபம் அதிகரித்துப், புஷ்பாக்ஷனே! பூலோகத்தில் நீ இராக்ஷதனாகப் பிறந்து, எப்பொழுதும் குரூரகாரியங்களைச் செய்து, பசிதாகங்களால் வருத்தமுற்று அலையக்கடவாய் என்று சபிக்க; நான் இந்திரனை நோக்கி, சுவாமீ! பொருத்தருளவேண்டும். அநுக்கிரகம் பண்ணுக. அடியேனுக்கு எப்போது முக்திகிடைக்கும் என்று கேட்க; இந்திரன் என்பாற் கிருபைகூர்ந்து, புஷ்பாக்ஷனே! விஷ்ணுமூர்த்தியானவர் பூலோகத்தில் இலக்குமிதேவியாரோடு பரிவாரங்கள் சூழச் சூரியவம்சத்தில் விரைவில் அவதரிப்பார். அவ்விடத்தில் நீ ஒரு சமயம் அவருடைய சகோதரனால் மரணமடைவாய். அப்பொழுது உனக்கு முக்திகிடைக்கும். என்று சொன்னான் எனக்கூறி, அடிக்கடி நமஸ்கரித்து நிற்க, ஸ்ரீராமபிரான் அவனுடைய வார்த்தைகளைக்கேட்டு மனமகிழ்ந்து நீ இப்பொழுது வைகுண்டலோகத்திற்குச் சென்று நம்மோடு இருக்கக்கடவாய். பிரளயகாலத்தில் உனக்கு மோக்ஷங்கொடுக்கின்றோம் என்று கூறியருளினார்.

அதுகேட்ட புஷ்பாக்ஷன் சுவாமீ! இன்னுஞ் சில வரங்கள் தந்தருளவேண்டும். அவையாவன:— தேவரீர் இந்த ஸ்த

லத்தில் எப்பொழுதும் விடுவசேனர் முதலிய அன்பர்கள் சூழச் சமஸ்த தேவர்களோடும் இலக்குமிதேவி சகிதராய் மனமகிழ்ந்து வீற்றிருக்கவேண்டும். உலகத்திலுள்ள கங்கை முதலிய தீர்த்தங்களெல்லாம் இங்கே வசிக்கவேண்டும். இந்தத்தலம் எப்பொழுதும் என்னுடைய பெயரால் விளங்க வேண்டும் என்று பிரார்த்திக்க, ஸ்ரீராமபிரான் மனமகிழ்ந்து அவன் கேட்ட வரங்களையெல்லாம் கொடுத்து, மேலும் மகிழ்ச்சி கொண்டு நான் இந்தத்தலத்திலுள்ள மிருகம் பக்ஷி முதலியவைகளுக்கும் மோக்ஷம் கொடுக்கிறேன். இது சத்தியம். சத்தியம். என் மனமும் இவ்விடத்திலேயே வசிக்க விரும்புகின்றது. முற்காலத்தில் இராவணனைக் கொல்லவேண்டும் என்ற எண்ணமுள்ள முனிவர்களாலும் தேவர்களாலும் நான் இவ்விடத்திலேயே இருக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்பட்டேன். ஆதலால் நான் இங்கு நின்றுஞ்சென்று இராவணனைக் கொன்று திரும்பிவந்து இங்கேயே எப்பொழுதும் வசிக்கின்றேன் என்று கூற, இராக்ஷதன் ஸ்ரீராமபிரானை வணங்கித்தோத்திரஞ் செய்து விடை பெற்றுக்கொண்டு வைகுண்ட பதவியை யடைந்தான்.

அதன்பின், ஸ்ரீராமர் சீதையைப் பிரிந்து, சுக்கிரீவனைச் சிநேகஞ் செய்து, அவனோடு இலங்கை நோக்கிச் சென்று, வானரசேனைகளாற் சமுத்திரத்தில் சேதுபந்தனஞ் செய்து, இலங்கைக்குப் போய், யுத்தத்தில் இராவணனைக் கொன்று சீதையை மீட்டுக்கொண்டு, மனமகிழ்ச்சியோடு புஷ்பகவிமானத்தில் ஏறி, அயோத்தியாபுரிக்கு வந்து, பரதருடைய வேண்டுகோளின்படி சிலகாலம் இராச்சியபரிபாலனஞ் செய்துகொண்டிருந்து, குசன், லவன் என்னும் புத்திரர்களைப் பெற்று, மூத்தகுமாரனாகிய குசனிடத்தில் இராச்சியபாரத்தை வைத்துவிட்டு, இலக்குமணர் சீதையென்னும் இருவரோடு வானப்பிரஸ்தாச்சிரமத்தைப் பெற்றுத் தண்டகாரணியத்தை யடைய, அங்குள்ள முனிவர்கள் ஸ்ரீராமபிரானைக் கண்டு தோத்திரம் பண்ணி, கிழங்கு பழமுதலியவைகளைக் கொடுத்து சுவாமீ! இவ்விடத்திலேயே வசிக்கவேண்டும் என்று பிரார்த்திக்க, ஸ்ரீராமபிரான் அவ்வார்த்தையைக்கேட்டுப் புன்முறுவலுடன் முகமலர்ச்சி காட்டி அவர்களை நோக்கிச் சொல்லுகின்றார்.

முனிவர்களே! காவேரியின் வடகரையில், திருவிடைமருதூருக்குச் சமீபத்திலுள்ள வில்வாரணியத்தில் தவசித்தியின் பொருட்டு வசிக்கவேண்டும் என்று முன்பே அங்குள்ள முனிவர்கள் கேட்டுக்கொள்ள அதற்கு உடன்பட்டேன். அன்றியும் புராதனன் என்னும் இராக்ஷதனும் அந்த ஸ்தலத்திலேயே நான் எப்பொழுதும் இருக்கவேண்டும் என்று என்னிடம் வரம் பெற்றுக்கொண்டிருக்கிறுன். எனக்கும் சீதைக்கும் இலக்குமணனுக்கும் அந்த ஸ்தலத்திலேயே வசிப்பதற்கு மனவிருப்பம் அதிகரிக்கின்றது. நீங்களும் என்னேடு அங்கு வரக்கடவீர்கள் என்று கூறி, ஸ்ரீராமபிரான் அம்முனிவர்களோடு வில்வாரணியத்துக்கு வந்து, ‡ சந்தனதடாகத்தின் மேல்கரையில் வீராசனத்திலிருந்து தவஞ்செய்துகொண்டிருந்தார். அப்பொழுது அவருடைய தவத்திற்கு அநுக்கிரகஞ் செய்ய விரும்பி, விஷ்ணுமூர்த்தி எதிரே வந்து இராமனே! உன் தவத்தின்பொருட்டு நான் பிரத்யக்ஷமாயிருக்கிறேன். வேண்டியவரங்களைப் பெற்றுக் கொள்ளக்கடவாய் என்று கூற; ஸ்ரீராமபிரான் விஷ்ணுமூர்த்தியை நோக்கி, உம்மையல்லாமல் எனக்கு வேறு என்ன இருக்கிறது. இப்பொழுது நான் பார்வதி நாயகராகிய சிவபெருமானைக்காண விரும்புகிறேன் என்று கூற, எனக்கு மேற்றிசையில் சர்வலோக நாதராயும் மகாதேவராயும் உள்ள பரமசிவன் மகிழவிருக்ஷத்தினடியில் பார்வதி சமேதராய் எழுந்தருளியிருக்கின்றுர். அவரை நோக்கி நம்முடைய சக்கரதீர்த்தக்கரையில் விரைந்து தவஞ்செய்யக்கடவாய். சிவபெருமான் உனக்குப் பிரசன்னராவார் எனக்கூற, ஸ்ரீராமபிரான் சீதை இலக்குமணர் என்னும் இருவருடன் சக்கரதீர்த்தத்துக்குச் சென்று, அதன் மேல்கரையில் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்துகொண்டிருந்தார். அவருடைய தவத்துக்கு மகிழ்ந்தருளிய சிவபெருமான் பிரசன்னராகி, இராமனே! உனக்கு வேண்டிய வரங்களைக்கேள் தருகிறேன் என்று கூறியருள, ஸ்ரீராமர் வேண்டிய வரங்களைப் பெற்றுக்கொண்டு அந்தத்தலத்திலிருந்து சிவபெருமானுக்கும் விஷ்ணுமூர்த்திக்கும் அநேக கைங்கரியங்களைச்செய்பவராய், கர்ப்பக்கிருகம், அர்த்தமண்டபம், மகா

---

‡ சந்தனதடாகம் என்பது சந்தனக்குளம் என வழங்குகிறது. இது சிவாலயத்துக்கு கிழக்கே ஒன்றரைமைல் தூரத்தில் உள்ளது. இதன் சமீபத்தில் வையத்தூர் காமாக்ஷி அம்மன் கோயில் இருக்கிறது,

மண்டபம், விமானம், கோபுரம் பிராகாரமுதலிய அங்கங்கள் நிரம்பப் பொன்னாலும் வெள்ளியாலும் கோயில்கள் இயற்றி, அந்த ஸ்தலத்தைத் தேவலோகம்போல் அழகுசெய்து, தினந்தோறும் மூன்றுகாலமும் ஸ்நானம்பண்ணி, உத்தமமான தவம் புரிந்துகொண்டிருந்து, சூரியன் துலாராசியில்வரும் ஐப்பசி மாசத்துப் பௌர்ணமி திதியில், சூரியோதயகாலத்தில், தீர்த்தோற்சவம் நடத்த நிச்சயித்துச், சிவபெருமானுக்கு உற்சவம் நடத்தினார். அவ்வாறே சித்திரை மாசத்துச் சித்திரைநக்ஷத்திரத்தில், தீர்த்தங்கொடுத்தல் என்னும் விசேஷத்தை நிச்சயித்து, விஷ்ணுமூர்த்திக்கும் உற்சவம் நடத்தினார். இவ்வாறு ஸ்ரீராமபிரானால் பூசிக்கப்பட்ட சிவயோகீசுவரர் அவருக்குவேண்டிய வரங்களைக் கொடுத்து ஸ்ரீராமர் அநுமான் முதலானவர்களோடு அந்தத் தலத்தில் எழுந்தருளியிருக்கின்றார். ஆதலால் இந்த க்ஷேத்திரம் திவ்வியமாகும். மூன்றுலகத்திலும் பரிசுத்தமுள்ளது. இந்த க்ஷேத்திரம் கயை என்றும், திருவிடைமருதூர் காசியென்றும், கும்பகோணம் பிரயாகையென்றுஞ் சொல்லப்படும். அது மிகப் பரிசுத்தமுள்ளது. இந்தத் தலத்தில் வரும் காவேரி கங்கையே. இவ்விஷயத்தில் யோசிக்கத்தக்கது ஒன்றுமில்லை. திருவிடைமருதூருக்கு ஈசானியபாகத்தில் காவேரி வடக்குநோக்கிச் செல்லுகிறது. அதில் ஒரு முறை ஸ்நானஞ்செய்தால் நூறு யாகஞ் செய்த பலன் கிடைக்கும். மூன்றுலகங்களிலும் உள்ள மூன்றரைக்கோடி தீர்த்தங்களும் அந்த உத்தரவாகினியில் எப்பொழுதும் வசிக்கின்றன. இது சத்தியம். சத்தியம். திருவிடைமருதூரிலும் வில்வாரணியத்திலும் கும்பகோணத்திலும் வீற்றிருக்கின்ற சிவலிங்கமூர்த்திகளுடைய மகிமை தேவர்களாலும் சொல்லமுடியாது. தினந்தோறும் பிரதக்ஷிணமுறையாக உத்தரவாகினியாயுள்ள காவேரி தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, திருவிடைமருதூரில் மருதீசரைத் தரிசனம் பண்ணிக்கொண்டு, கும்பகோணத்தில் சக்கரதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, அங்குள்ள சக்கரபாணியாகிய விஷ்ணுமூர்த்தியையும், கும்பேசுவரரையும் தரிசனம் பண்ணிப், பின்பு மத்தியானத்தில் சூலதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து சிவபெருமானை யருச்சித்துப் பிதிரர்களையுத்தேசித்துப் பிரியத்தோடு பிராமணர்களுக்கு அன்னங்கொடுப்பவனுக்குள்ள புண்ணியம் அளவிடமுடியாது. மேலும் அவனுக்கு ஆயுளும்,

கீர்த்தியும், வெற்றியும், புத்திர பௌத்திரர்களும், தனதானியங்களும் தினந்தோறும் விருத்தியடையும். ஆதலால் தேவரீர் இருத்தற்கு இந்த இடமே தகுந்தது. சிவபெருமான் உமக்குப் பிரசன்னராவார் என்று அகஸ்திய முனிவர் கூறினர்.

புராதனன் பூர்வவிருத்தாந்தச்சருக்க முற்றிற்று.

---

## விட்டுணு பூசித்த சருக்கம்.

அதுகேட்ட சிவயோகி முனிவர் அகஸ்திய முனிவரை நோக்கி, முனிபுங்கவரே ! விஷ்ணுமூர்த்தி தனக்கு மேற்றிசையிலுள்ளதாகச் சொல்லிய க்ஷேத்திரத்தின் மகிமையையும் அங்கு எழுந்தருளியிருக்கும் சிவயோகீசுவரருடைய மகிமையையும் எனக்கு விரித்துக் கூறவேண்டும். அதைக் கேட்டமாத்திரத்தில் ஆனந்தம் உண்டாகிறதென்று கூற, அகத்தியமுனிவர் சொல்லத் தொடங்கினர்.

சுவாமீ! முன்கிருதயுகத்தில் பிரமதேவனும் விஷ்ணுமூர்த்தியும் ஓரிடத்திற் கூடியிருந்தபொழுது ஒவ்வொருவரும் நானே பெரியவன் நானே பெரியவன் என்று விவாதஞ் செய்துகொண்டிருந்தார்கள். இந்திரன் முதலிய தேவர்கள் அதனையறிந்து அவ்விடத்துக்குச் சென்று அவ்விருவருடைய அபிப்பிராயத்தையும் கேட்டார்கள். அப்பொழுது பிரமதேவர் நான் ஒருவனே மூவுலகங்களுக்கும் தலைவன் என்றார். விஷ்ணுமூர்த்தி நான் ஒருவனே மூவுலகங்களுக்கும் தலைவன் என்றார். அவ்விருவருடைய சொல்லையும் கேட்டுத் தேவர்கள் ஒன்றுங்கூறாமல் மௌனமாயிருந்தார்கள். அப்போது ஒரு வாக்கு அற்புதமாய், கேட்போர்க்கு மயிர்க்கூச்சலுண்டாகும்படி ஆகாயத்திலிருந்து எழுந்தது. அஃதாவது, நீங்களிருவரும் விவாதஞ் செய்துகொள்ளவேண்டாம். காவேரிக்கரையிலுள்ள வில்வாரணியத்துக்குச் செல்லுங்கள். அங்கே சிவபெருமான் உமாதேவியாரோடு எழுந்தருளியிருக்கின்றார். அவர் உங்கள் மகிமையை அறிவார். இதிற் சந்தேகமில்லையென்று

எழுந்த அசரீரிவாக்கைக்கேட்டு அவ்விருவரும் வில்வாரணியத்தையடைந்து அங்குள்ள சிவபெருமானைத் தரிசனம் பண்ணினார்கள். சிவபெருமான் அவ்விருவரையும் நோக்கிப் புன்சிரிப்புப் பொருந்திய திருமுகம் உடையவராய் நீங்கள் இருவருள் எவன் நம்முடைய பாதங்களை விரைவிற்கண்டு பூசிக்கின்றானோ அவனே உயர்ந்தவன். அவனே நம்மாற் சிலாகிக்கத் தகுந்தவன் என்று கூறியருள, அதுகேட்ட விஷ்ணுமூர்த்தியானவர் உடனே பன்றி வடிவமெடுத்துப் பூமியைப் பிளந்துசென்று, பாதாளலோகத்தையடைந்து அப்பாற் செல்வதற்கு வன்மையின்றி வருத்தமுற்றுக் கிடந்து சிவபெருமானைத் தியானித்து மகாதேவரே! பார்வதி நாயகரே! பிரபுவே! தீனபந்துவே! கிருபைக்கடலே! மகேசுவரரே! தேவரீர் தேவர்களுள் ஒருவராயிருந்தாலும் அத்தேவர்கள் உம்முடைய அம்சபூதராவார்கள். நீரே அநாதிவஸ்து. உம்மாலேயே உலகங்கள் சிருஷ்டித்துப் பரிபாலிக்கப்பட்டு வருகின்றன. அடியேனைக் காத்தருளும் என்று பிரார்த்திக்க, சிவபெருமான் அவருக்குத் திருவடிதரிசனம் கொடுத்தருளினார். அப்பொழுது விஷ்ணுமூர்த்தியானவர் மிகுந்த அன்புடன் அவ்விடத்தில் சிவபெருமானுடைய திருவடிகளைப் பூஜைசெய்து அஷ்டோத்தரசதநாமங்களால் அருச்சிக்கத் தொடங்கினார். அதற்கு இருடி பிர்மா. சந்தசு காயத்திரி. தேவன் சிவன். மூலமந்திரத்தால் அங்கநியாச கரநியாசஞ்செய்துகொண்டு அவ்வஷ்டோத்தரசதநாமங்களைக்கூறி அருச்சிக்கவேண்டும்.

## அஷ்டோத்தரசதநாமாவளி வருமாறு.

ஓம் அகண்யாய நம:
ஓம் அச்யுதாராத்யாய நம:
ஓம் ஆபந்நார்த்தி ப்ரபஞ்ஜநாய நம:
ஓம் ஆம்நாயஸாராய நம:
ஓம் ஆராத்யாய நம:
ஓம் ஆச்ரிதாவனதத்பராய நம:
ஓம் ஈட்யாய நம:
ஓம் ஈச்வராய நம:
ஓம் ஈசாநாய நம:
ஓம் இந்திராபதிவந்திதாய நம: கo

ஓம் உமாபதயே நம:
ஓம் உதாராங்காய நம:
ஓம் உஜ்வலாங்காய நம:
ஓம் உபாஸிதாய நம:
ஓம் ஊர்ஜிதாஷ்டவிபூதயே நம:
ஓம் ரிணத்ரயவிவர்ஜிதாய நம:
ஓம் ரிதுரூபாய நம:
ஓம் லஸன்மௌளயே நம:
ஓம் லுப்ததுஷ்க்ருதஸஞ்சயாய நம:
ஓம் லூநத்ரிபுரதைத்யேந்திராய நம: ௨0
ஓம் ஏணதேஹஹலஸத்கராய நம:
ஓம் ஐராவதார்ச்சிதபதாய நம:
ஓம் ஐந்த்ரஸ்தானப்ரதாயகாய நம:
ஓம் ஓஷதீசார்க்கவஹ்நயக்ஷாய நம:
ஓம் ஔந்நத்யஸ்திதிஸம்ஸ்திதாய நம:
ஓம் அந்தராயௌகவித்வம்ஸிநே நம:
ஓம் கல்யாணமயவிக்ரஹாய நம:
ஓம் ககேசாய நம:
ஓம் கசராராத்யாய நம:
ஓம் கஜசர்மாம்பராவ்ருதாய நம: ௩0
ஓம் கனசந்நிபவாமாங்காய நம:
ஓம் கனசாரநிபாகிருதயே நம:
ஓம் சித்ஸ்வரூபாய நம:
ஓம் சதுர்ப்பாஹவே நம:
ஓம் சதுர்வேதமயாய நம:
ஓம் சஞ்ஞய நம:
ஓம் சத்மலோகமநோதூராய நம:
ஓம் சந்தோவேத்யாய நம:
ஓம் ஜலாகிருதயே நம:
ஓம் ஜகந்மூர்த்தயே நம: ௪0
ஓம் ஜகந்நாதாய நம:
ஓம் ஜராமரணவர்ஜிதாய நம:
ஓம் சர்ச்சரீகிருதகாலாங்காய நம:
ஓம் சணசணிதஹம்ஸகாய நம:

ஓம் ஞாதாதங்கவிச்சேத்திநே நம:
ஓம் டங்காரத்ருததுஷ்கிருதாய நம:
ஓம் டங்காயிதபயோராசித்ருததுஷ்கிருதபாவகாய நம:
ஓம் அபாஸ்ததக்ஷஸவநாய நம:
ஓம் டாகிருதயே நம:
ஓம் டம்பவர்ஜிதாய நம: ௫0
ஓம் டக்காவாதநதத்வஞாய நம:
ஓம் ணுயிதாஹிலஸத்கராய நம:
ஓம் தரஸ்விநே நம:
ஓம் தருணுய நம:
ஓம் தந்விநே நம:
ஓம் தத்வாதீதாய நம:
ஓம் தபோநிதயே நம:
ஓம் அமலதநுத்யாதாய நம:
ஓம் தயாளவே நம:
ஓம் தாநவாந்தகாய நம: சூ0
ஓம் தராதராய நம:
ஓம் தர்மமூர்த்தயே நம:
ஓம் தநஞ்சயவரப்ரதாய நம:
ஓம் நவநீதோபமஸ்வாந்தாய நம:
ஓம் நகராஜஸுதாபதயே நம:
ஓம் பரமாத்மநே நம:
ஓம் பரந்தாம்நே நம:
ஓம் பரஞ்ஜ்யோதிஷே நம:
ஓம் பராத்பராய நம:
ஓம் பாலத்ருக்ஜிதகாமாய நம: எ0
ஓம் பலபோக்த்ரே நம:
ஓம் பலப்ரதாய நம:
ஓம் பலிஸேவ்யாய நம:
ஓம் பலிபவ்யாய நம:
ஓம் பயகிருதே நம:
ஓம் பயநாசநாய நம:
ஓம் மஹாதேவாய நம:
ஓம் மஹாபாஹவே நம:

ஓம் யஜ்வமூர்த்தயே நம:
ஓம் யதிப்ரியாய நம: ௮0
ஓம் யஞேசாய நம:
ஓம் யஞபலதாய நம:
ஓம் ரஜதாசலநாயகாய நம:
ஓம் ராஜராஜப்ரியாய நம:
ஓம் ரம்யாய நம:
ஓம் ரத்நஸாநுசராஸநாய நம:
ஓம் லாவண்யஸிந்தவே நம:
ஓம் லளிதாய நம:
ஓம் லக்ஷ்யலக்ஷணஸம்ஜ்ஞகாய நம:
ஓம் வதாந்யாய நம: ௯0
ஓம் வரதாய நம:
ஓம் வாக்மிநே நம:
ஓம் வந்தாருஹரிசந்தநாய நம:
ஓம் சரண்யாய நம:
ஓம் சங்கராய நம:
ஓம் சம்பவே நம:
ஓம் சிவதராய நம:
ஓம் சிவாய நம:
ஓம் ஷண்முகேபாஸ்யஜநகாய நம:
ஓம் ஷடங்கசுருதிஸம்மதாய நம: ௧00
ஓம் ஸர்வஜ்ஞாய நம:
ஓம் ஸர்வலோகேசாய நம:
ஓம் ஸர்வபூதஹிதோதாய நம:
ஓம் ஹராய நம:
ஓம் ஹரிப்ரியாய நம:
ஓம் ஹம்ஸாய நம:
ஓம் க்ஷமாமூர்த்தயே நம:
ஓம் க்ஷமாகராய நம: ௧0௮

சிவாஷ்டோத்தரசதநாமாவளி முற்றிற்று.

---

என வருகிற அஷ்டோத்தரசதநாமங்களால் விஷ்ணுமூர்த்தியானவர் தாமரைப்பூக்களையும் வில்வபத்திரங்களையுங் கொண்டு சிவபெருமானை அருச்சனை செய்து வணங்கி ஆனந்தசாகரத்தில் அமிழ்ந்தினர். அவ்வருச்சனைக்கு மகிழ்ந்தருளிய சிவபெருமான் இலிங்கத்தினின்றும் வெளிப்பட்டருளி, விஷ்ணுவே! நீ செய்த பூசைக்கு நாம் மகிழ்ந்தோம். உனக்கு நன்மை உண்டாகக்கடவது. வேண்டியவரங்களைக் கேள் தருகின்றோம். சிருஷ்டி, திதி, சங்காரம் என்னும் முத்தொழிற்குங் காரணம் நீயல்லாமல் வேறு கடவுள் யார் உண்டு. நீ ஈசன். நீ அநாதி. உன்னிடத்தில் எல்லாம் ஒடுங்குகிறது. பிரமதேவனுக்கும் உனக்கும் நமக்கும் தாரதம்மியம் இருக்கிறது. உன்னை உன் ஆன்மாவில் பார். நிருவிகாரமாயும், நிராதாரமாயும், நிருவிகற்பமாயும், நிரஞ்சனமாயும், ஒன்றினும் பற்றற்றவனும், நிர்க்குணனும், நித்தியனும், மாயைக்கு அப்பாற்பட்டவனும், தேசோமயனும் உள்ள நான் சிவன் என்பது முதலிய நாமங்களைக்கொண்டு பூசிக்கப்படுகின்றேன். நமக்கும் உனக்கும் நாமரூபங்களால் வேற்றுமையன்றி உண்மையில் வேற்றுமையில்லை. நீயே நான் என்று சொல்லப்பட்ட விஷ்ணுமூர்த்தியானவர் வரங்கேட்பாராயினர்.

மகேசுவரரே! உமாதேவியாரோடு எழுந்தருளி நிற்கின்ற தேவரீர் அடியேனோடும் தேவர்களோடும் இவ்விடத்திலேயே எப்பொழுதும் வீற்றிருத்தல்வேண்டும். கங்கைமுதலிய மூன்றரைக் கோடிதீர்த்தங்களும் தேவரீருடைய ஆஞ்ஞையால் எப்பொழுதும் இந்த க்ஷேத்திரத்திலேயே வசிக்கும்படி செய்தருளவேண்டும். மேற்றிசையில் என்னுடைய பெயரால் ஒருதீர்த்தம் எப்பொழுதும் இருக்கவேண்டும் அத் தீர்த்தத்தில் தேவரீருடைய ஆஞ்ஞையால் எல்லாத்தீர்த்தங்களும் வசிக்கவேண்டும் என்று பிரார்த்தித்துக்கொண்டு, விஷ்ணுமூர்த்தியானவர் தம்முடைய சக்ராயுதத்தையெடுத்துப் பூமியைப் பிளந்து அவ்விடத்திற் பாதாளகங்கையை வரவழைத்து அதைச் சிவபெருமானுக்கு அபிஷேகம் பண்ணித் தாமரைப்புஷ்பங்களால் பூஜைசெய்தார். அத்தீர்த்தம் சக்கரதீர்த்தம் என்று சொல்லப்படுகிறது. அது எல்லாப் பாவங்களையும் நீக்கத்தக்கது. ஆதலால் அந்த க்ஷேத்திரம் உயர்வாகும். அத்தீர்த்தத்துக்குக் கீழ்த்திசையில் விஷ்ணுமூர்த்தியானவர் எல்

லாத்தேவர்களோடும் இப்பொழுதும் வசிக்கின்றார். அந்த க்ஷேத்திரம் சிவபெருமானுக்கும் விஷ்ணுவுக்கும் பிரியமுள்ளது. பிரமதேவர் விஷ்ணுமூர்த்தியோடு விவாதம் பண்ணினமையாற் கோபங்கொண்டு அந்த ஸ்தலத்தில் சிவபெருமான் பிரமதேவரைச் சபித்தருளினார். அங்கே தேவர்களெல்லாம் சிவபெருமானைத் துதித்துக்கொண்டு இப்பொழுதும் சிவசந்நிதியில் இருக்கிறார்கள். ஆதலால் தேவரீர் என்னோடும் முனிபுங்கவர்களோடும் அந்த ஸ்தலத்தில் இருத்தல்வேண்டும். சிவபெருமான் உம்முடைய மகிமையை நோக்கி மகிழ்ச்சியடைவார். உம்முடைய பெயரினால் அங்குள்ள சிவபெருமானுக்குப் பிரசித்தியுண்டாகும் என்று அகஸ்தியமுனிவர் கூறினார்.

விட்டுணு பூசித்த சருக்கமுற்றிற்று.

---

## சிவயோகியார் மகிமைச் சருக்கம்.



அதுகேட்ட சிவயோகிமுனிவர், மேலும் அந்தஸ்தலத்தில் வீற்றிருக்கும் சிவபெருமானுடைய மகிமையைக்கேட்கவிருப்பமுள்ளவராய், அகத்தியமுனிவரை நோக்கி, முனிசிரேட்டரே! சிவபெருமான் சபித்தபின் பிரமதேவர் யாதுசெய்தார்? அவர் உலகத்தில் யாவராலும் பூசிக்கத்தகுந்தவராக எப்படி ஆனார்? அவற்றை எனக்கு விரித்துக் கூறவேண்டுமென்று கேட்க, அகத்தியமுனிவர் சொல்லத் தொடங்கினார்.

சிவபெருமான் சபித்தவுடன், பிரமதேவர் மனக்கலக்கமுற்றுச், சாபம் நீங்கித் திருவருள் பெறக்கருதி, அத்திருவியலூரில் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் இடத்துக்கு மேற்றிசையில் உள்ள சக்கரதீர்த்தக்கரையிலே, பஞ்சாக்கினிமத்தியில் நின்று நாசிநுனியில் வைத்த கண்களையுடையவராய்க், காற்பெருவிரலை ஊசியின் நுனியில் ஊன்றிச், சிவபெருமானைத் தியானித்து அநேக ஆயிரவருடகாலம் அருந்தவஞ் செய்துகொண்டிருந்தார். இருந்தும், சிவபெருமான் பிரமதேவரை விஷ்ணுவோடு வாதம் பண்ணிய பிதுர்த்துரோகியென்றெண்ணி, அவருக்குப் பிரத்தியக்ஷமாகவில்லை. அதையறிந்த தேவர்களெல்லாம் சிவபெருமானை

நோக்கித் தோத்திரஞ்செய்து, எம்பெருமானே! பிரமதேவர் தேவரீருடைய அநுக்கிரகம் பெறக்கருதிப், படைத்தற்றொழிலை நிறுத்திவிட்டு அநேக ஆயிரவருடகாலம் தவஞ்செய்துகொண்டிருக்கிறார். அதனால் உலகத்தில் படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் மூன்று தொழில்களுஞ் சிறிதும் நடக்கவில்லை. ஆதலால் பிரமதேவருக்கு எவ்விதமும் அநுக்கிரகஞ் செய்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அதுகேட்டுக், கிருபைக்கடலாயும், உலகங்களுக்கெல்லாம் சுகத்தைச் செய்பவராயும், அதனாற் சங்கரன் என்னும் பெயரை யோகரூடியாகத் தனக்கு உடையவராயும் உள்ள சிவபெருமான், தேவர்களே! இந்தப் பிரமன் தனக்குப் பிதாவாகிய விஷ்ணுவின் பெருமையைத் தெரிந்துகொள்ளாமல் அவனோடு வாதஞ்செய்தபடியால், பிதுர்த்துரோகம் உள்ளவனாக இருக்கிறான். ஆதலால் தேவர்களாலும் பிராமணர்களாலும் பூசிக்கத்தகுந்தவனல்ல. இவன் செய்யுந்தவத்தால் அடையத் தக்க பலன் ஒன்றுமில்லை. நீங்கள் உங்கள் உலகத்துக்குப்போகக் கடவீர்கள் என்று ஆஞ்ஞாபித்தருள, அதுகேட்ட தேவர்கள் மனவருத்தமடைந்து, சிவபெருமானை நமஸ்கரித்து எழுந்துநின்று இந்தப் பிரமதேவர் செய்யுந் தவத்தால் உலகங்களும் இந்திரன் அக்கினி முதலியதேவர்களும் பீடிக்கப்பட்டிருக்கிறார்களாதலால், இவர் செய்த குற்றத்துக்குப் பிராயச்சித்தம் விதித்து அநுக்கிரகஞ்செய்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க, சிவபெருமான் பிரமதேவரிடம் இரக்கமுற்று, இவன் பிதுர்த்துரோகஞ் செய்திருந்தும், நம்மை நோக்கித் தவஞ்செய்தமையால், தனக்கு ஆலயங்களிற் பூசை நடக்கப்பெறாமல், சுருதிஸ்மிருதிமார்க்கமாய் நடக்கும் கிரியைகளில்மாத்திரம் அதிகாரமுடையவனாகுக என்று கூறியருளத், தேவர்களெல்லாம் அதுகேட்டு மகிழ்ச்சியுற்றுத் தங்களுலகம் போய்ச் சேர்ந்தார்கள்.

அதன்பின், பிரமதேவர் அந்த ஸ்தலத்தில் சிவபெருமானுக்குப் பிரீதியாக ஓர் அசுவமேதயாகந்தொடங்கி அந்த யாகத்தில் வபையினால் ஓமம் பண்ணிக்கொண்டிருக்கும்பொழுது, சிவபெருமான் திருவுளமகிழ்ந்து, அந்த யாகாக்கினியிலிருந்து பார்வதிசமேதராய்த் தோன்றி யருளித், தேவர்களுள் மேம்பட்ட பிரமதேவனே! நீ இந்த யாகத்தில் உன்னுடைய வபையைக்

கொண்டு ஓமம் பண்ணினமையால், விஷ்ணுவோடு வாதஞ்செய்த தோஷத்தினின்றும் நீங்கி, இப்பொழுது பரிசுத்தனாகிவிட்டாய். உனக்கு நன்மையுண்டாகுக. வேண்டிய வரங்களைக்கேள் தருகிறோம் என்று கூறியருளப், பிரமதேவர் சிவபெருமானை நோக்கி, சுவாமீ! தேவரீர் அடியேன்மீது கிருபை கூர்ந்து எனக்குப் புத்திரனாகவந்து அவதரித்தருளவேண்டும். அன்றியும் தேவரீர் இவ்விடத்திலேயே எப்பொழுதும் வீற்றிருக்கவேண்டும் என்று பிரார்திக்க, சிவபெருமான் அப்படியே ஆகுக என்று அநுக்கிரகஞ் செய்து அந்தர்த்தானமாயினர். அதுநிற்க.

சரயுநதிக்கரையிலே, நந்திக்கிராமத்தில் தேவசர்மா என்னும் பிராமணர் ஒருவர் இருந்தார். அவர் வருணாச்சிரமதருமங்களெல்லாவற்றையும் நடத்துவதிற் கருத்துள்ளவர். தினந்தோறும் விஷ்ணுவை நோக்கிப் பூஜை செபம் ஓமமுதலியவற்றை அவர் திருவுளமகிழச் செய்து அவருடைய திருநாமங்களை எப்பொழுதும் உச்சரிப்பவர். அவர் விஷ்ணுமூர்த்தியை நேரே தரிசிக்க வேண்டுமென்னும் விருப்பம் அதிகரிக்க, இந்திரியநிக்கிரகமுடையவராய் யாதொரு உணவும் உட்கொள்ளாமல் பதினாயிரவருடம் அருந்தவஞ் செய்துகொண்டிருந்தார். அப்பொழுது அவருடைய தபோக்கினியால் தேவர்கள் தகிக்கப்பட்டு விஷ்ணுமூர்த்தியைச் சரணமடைந்து, கிருபாநிதியே! பூவுலகத்தில் தேவசர்மா என்பவர் உம்மைத் தரிசிக்கவேண்டுமென்னும் விருப்பமேலீட்டால் தவஞ்செய்துகொண்டிருக்கிறார். அந்தத்தபோக்கினியானது எங்களைத் தகிக்கின்றது. அவருக்குத் தேவரீர் இப்பொழுதே பிரசன்னராகி எங்களைக் காத்தருளவேண்டும் காத்தருளவேண்டும் என்று பிரார்த்திக்க, விஷ்ணுமூர்த்தி தேவர்களோடு அவருக்கு முன் தோன்றியருளித், தவத்தால் தேஜோமயமாயிருக்கின்ற அவரை நோக்கித், தேவசர்மாவே! நீ தவஞ்செய்யவேண்டாம். உனக்கு நன்மை யுண்டாகுக. வேண்டியவரங்களைக் கேள் தருகிறோம். என்று கூறியருளத்; தேவசர்மாவானவர் சங்கு, சக்கரந்தரித்த திருக்கரங்களையுடையவராயும், உருக்கப்பட்ட பொன்போன்ற பிரகாசம் பொருந்தித் தமது இடத்தொடையின்மேல் வைக்கப்பட்டுள்ள இலக்குமிதேவியை இடக்கையால் அணைத்தவராயும், கருடவாகனத்தில் வீற்றிருப்பவராயும், கிருபாநிதியாயும் உள்ள

அவ்விஷ்ணுமூர்த்தியைத்தரிசித்துப்பேரானந்தமடைந்து, சுவாமீ! என்னைக் காத்தருளவேண்டும் காத்தருளவேண்டும். நான் புத்திரனில்லாமல் இருக்கின்றமையால் தேவரீர் இப்பொழுதே அடியேனுக்குப் புத்திரனாக அவதரித்தருளவேண்டும் என்று பிரார்த்திக்க; விஷ்ணுமூர்த்தி அவர் விரும்பிய வரங் கொடுத்தருளித் தமது பரிவாரங்களோடு மறைந்தருளினர்.

பின்பு விஷ்ணுமூர்த்தியானவர் தேவசர்மா என்னும் அவருக்கு அவர் மனைவி தேவபூரியென்பவளிடத்தில் புத்திரனாக அவதரித்தார். அப்புத்திரரே கிருஷ்ணசர்மா என்பவர். அவர் யாவராலும் வணங்கத் தகுந்தவர். அவர் மனைவி கமலையென்பவள். சிவபெருமானுடைய ஆஞ்ஞையால் அவள் வயிற்றில் பிரமதேவர் தேவர்களாற் பிரார்த்திக்கப்பட்டுக் கிருஷ்ணசர்மா என்பவருக்குப் புத்திரராக வந்து பிறந்தார். அவரே விஷ்ணுசர்மா என்பவர். அவரே உமக்குப் பிதா. நீர் அவர் பொருட்டுச் சுசீலையென்னும் அவருடைய மனைவியிடத்தில் அவதரித்தீர். முனிபுங்கவரே! நீர் பிராகிருதஜனங்கள்போல உம்முடைய சொரூபத்தைத் தெரிந்துகொள்ளாமலிருக்கிறீர். நீர் முற்காலத்தில் பிரமதேவரால் வேண்டிக்கொள்ளப்பெற்று இப்பொழுது அவருக்குப் புத்திரராக வந்து அவதரித்திருக்கின்றீர். நீர் உற்பத்தியும் நாசமும் இல்லாதவராயிருந்தும் உற்பத்தியுடையவர்போலத் தேகபரிச்சின்னராய் இருக்கின்றீர். உம்முடைய ஆன்மாவில் நீர் தேகபுத்தி பண்ணவேண்டாம். உண்மையான சொரூபபுத்தியைச் செய்தருளும் என்று அகத்திய முனிவர் கூறினர்.

அதுகேட்டருளிய பெருந்தவச் சிவயோகிமுனிவர் தம்முடைய சொரூபநிலையை உணர்ந்து ஒருமுகூர்த்தகாலம் தியானத்திலிருந்தார். அப்பொழுது அவருடைய சந்நிதானத்தில் தேவர்கள் கற்பகப்பூமழை பொழிந்தார்கள். தெய்வப்பெண்கள் நடனஞ்செய்தார்கள். தேவவாத்தியங்கள் முழங்கின. அங்குள்ள முனிவர்களெல்லாம் அவருடைய மகிமையைக் கேட்டும் பார்த்தும் மகிழ்ச்சியுற்றுத் தண்டாகாரமாய்ப் பூமியில் விழுந்து நமஸ்கரித்தார்கள். அகத்தியமுனிவரும் அவருடைய திருவடிகளிற் சிரசால் நமஸ்கரித்து, சுவாமீ! தேவரீர் எப்பொழுதும் தேவர்க

ளுக்குள் சிரேஷ்டராகவும் வேதங்களால் அறியத்தகுந்தவராகவு மிருக்கிறீர். நீரே சிவபெருமான். சிவபெருமானே நீர். உமக்கும் சிவபெருமானுக்கும் தாரதம்மியம் இல்லை. சத்தியம். சத்தியம். உம்மைவழிபடுகின்றவன் தேவர்களாற் பூசிக்கத்தகுந்தவனுவான். சிவபெருமான் அவனுக்குப் பிரசன்னராகி அநுக்கிரகஞ்செய்வார். உம்முடைய சகோதரர்கள் மகாத்மாக்கள். சமஸ்ததேவர்களா லும் வணங்கத் தகுந்தவர்கள். அஷ்டமூர்த்திசொரூபமாயுள்ள வர்கள். அவர்கள் சீக்கிரம் இவ்விடத்துக்குத் தேவர்களோடுவரு வார்கள். நீர் உலகங்களுக்கெல்லாம் அநுக்கிரகஞ் செய்யவேண் டுமென்னும் எண்ணமுடையவராய் அம்முனிவர்களோடு சிவயோ கிநாதருடைய சந்நிதானத்தில் தவஞ்செய்க என்று சொல்லிக் கொண்டிருக்கும்பொழுது, அவருடையசகோதரர்கள் எழுவரும் அவ்விடத்துக்கு வந்துசேர, அங்குள்ள முனிவர்களெல்லாம் உல கத்துக்கு அநுக்கிரகஞ் செய்வதில் விருப்பமுள்ள அவர்களின் வருகையைத் தெரிந்து, உடனே இருக்கைவிட்டெழுந்து எதிர் சென்று வணங்கித் தோத்திரஞ்செய்து, அவர்களை யழைத்து வந்து அர்க்கியபாத்தியங்கொடுத்து அதிதிபூஜை பண்ணி மகிழ்ச் சியுடன் இருந்தார்கள்.

அப்பொழுது, வந்த ஏழுமுனிவரும் தம்மின் மூத்தவ ராகிய சிவயோகிமுனிவரை நமஸ்கரிக்க, அவரும் தம்முடைய சகோதரர்களை மார்போடணைத்து உச்சிமோந்து க்ஷேமம் விசா ரித்து அன்புசெய்ய, அம்முனிவர் எழுவரும் பொன்னுற்செய்த ஆசனங்களிலிருந்து சிவயோகிமுனிவருடன் மனோரம்மியமான சிவகதைகளைப் பாராட்டிப் பேசிக்கொண்டு மகிழ்ச்சியுற்றிருந்தார் கள். அவர்களுடைய தரிசனங் கிடைக்கப் பெற்றமைபால் அங் குள்ள முனிவர்களெல்லாம் மிகப் பரிசுத்தராளுர்கள். அந்தச் சமயத்தில் அகத்தியமுனிவர் சிவயோகிமுனிவரையும் அவரு டைய சகோதரர்களையும் தோத்திரம் பண்ணிச், சிவயோகிமுனி வரை நோக்கி, சுவாமீ! மூன்றுலகங்களுக்கும் கிடைத்தற்கரிய உம்முடைய திருவடித் தரிசனத்தை இங்குள்ள தேவர்களும் முனிவர்களும் இலகுவிற் பெற்றுக்கொண்டமையால் இவர்கள் உயர்ந்தவர்கள். உம்முடைய கிருபாநோக்கம் ஒருவனுக்குக் கிடைத்தால் அவன் எல்லாப் பாவங்களும் நீங்கப்பெறுவான். சிவ பெருமான் அவனுக்குப்பிரசன்னராகி அவன் கேட்டவரங்களைக்

கொடுத்தருளுவார். அவன் மூன்றுலகங்களிலும் எல்லாத்தேவர்களாலும் பூசிக்கத் தகுந்தவனுவான். ஆதலால் நான் உம்மைத் தரிசனஞ் செய்தற்பொருட்டு இங்கு வந்தேன். என்னுடைய ஜன்மமும், ஞானமும், கருமானுஷ்டானங்களும், தவமும் இப்போதுதான் பயன்பெற்றன என்று கூறி, அவருடைய திருவடிகளிற் சிரம் பொருந்த நமஸ்கரித்துத் தோத்திரஞ்செய்து அவரை மகிழும்படி செய்தார்.

அதன்பின் சிவயோகிமுனிவர் தம்முடைய சகோதரர்களோடு முனிவர்களெல்லாஞ் சூழ்ந்து வர அகத்தியமுனிவரை முற்கொண்டு, காவேரியின் வடகரையை அடைந்து, பாவங்களையெல்லாம் நீக்கத் தகுந்த சூலதீர்த்தத்தில் அரசமரத்தினடியில் ஸ்நானஞ் செய்து, மனோநியதியையுடையவராய், ஸ்ரீபஞ்சாக்ஷர செபஞ்செய்து சிவத்தியானத்திலிருந்து மனோலயம்பெற்றுச், சிவபெருமானை நூறு சுலோகங்களால் தோத்திரஞ்செய்து, சிவபெருமானுக்கு ஈசானதிக்கில் உக்கிரமாகத் தவஞ் செய்துகொண்டிருந்தார். அவருடைய தபோக்கினியால் உலகங்களெல்லாம் தகிக்கப்பட்டன. அப்பொழுது தேவர்கள் பகவானையும் மகாதேவனையும் சர்வலோகசரணியனையும் உள்ள அம் முனிவரைச்சரணமடைந்து சுவாமீ! நீர் உம்முடைய சொரூபத்தை விட்டு வேறொரு தேகத்தையெடுத்து எதற்காகத் தவஞ்செய்கின்றீர். உம்மையல்லாமல் சிவபெருமான் என்று வேறு ஒருவருமில்லையே. எல்லாத்தேவர்களுக்கும் சிரேஷ்டர் நீரே. நீரே எல்லாவற்றிற்குங் காரணமாயுள்ளவர். நித்தியமாயுள்ளவர். உம்மிடத்திலேயே எல்லாம் நிலைபெறுகின்றன. பிரம விஷ்ணு உருத்திரவடிவங்கொண்டு உம்மாலேயே உலகங்கள் சிருஷ்டித்துக் காத்து அழிக்கப்படுகின்றன. அவ்வாறிருக்க, எந்தப்பலனைக் கருதி நெடு நாள் தவஞ்செய்துகொண்டிருக்கிறீர். உம்முடைய ஆன்மாவில் மனசைச்செலுத்தி ஞானாநந்தசொரூபியாயிருக்கக்கடவீர்என்றுபிரார்த்தித்தார்கள்.

உடனே சிவபெருமான் இலிங்கத்தினின்றும் தோன்றி இளம்பிறைச் சந்திரனால் அலங்கரிக்கப்பட்ட சடையுடையவராயும், பார்வதிசமேதராயும் இடபவாகனத்தின்மேல் எழுந்தருளிவந்து சிவயோகிமுனிவரைச் சமீபித்துத், தம்முடைய சடாமண்டலத்திலுள்ள கங்கையை விடுத்து 'அதில் அவரை மூழ்கும்

படி செய்ய, அம்முனிவர் யோகத்தை விட்டெழுந்து சிவபெருமானைத் தரிசித்துத் தோத்திரம்பண்ணிப் பரமானந்தமடைந்து, அவருடைய சந்நிதியில் சகோதரர்களோடு அஞ்சலியஸ்தராய் நிற்க, சிவபெருமான் அவரை நோக்கி முனிவனே ! உன்னால் உக்கிரமான தவஞ்செய்யப்பட்டது. அந்தத்தவத்தாலும் உன்மகிமையாலும் உலகங்களெல்லாம் பரிசுத்தமடைந்தன. இனி நீ தவஞ்செய்யவேண்டாம். உன்னில் உன்னைப்பார். நாம் பிரமதேவனுக்கு வரங்கொடுத்தமையால் அவனுக்குப் புத்திரனாக வந்து அவதரித்தோம். நானே நீ. நீயே நான். நமக்கும் உனக்கும் பேதமில்லை. இது நிச்சயம். உன் சொரூபத்தை நீ அறியக்கடவாய் என்று அருளிச்செய்து, தம்முடைய திருக்கரத்தால் அவருடைய கையைப் பற்றிக்கொண்டு மற்றை ஏழுமுனிவர்களோடும் இலிங்கத்திருமேனியில் மறைந்தருளினார். அன்றுமுதல் அந்த இலிங்கமூர்த்தியின் முடியில் சடைகள் காணப்படுகின்றன. அந்த லிங்கமூர்த்தியில் சிவயோகியார் ஒடுங்கினமையாலும் அந்த மூர்த்தி சிவயோகியாருக்கு நாதனாயிருக்கின்றமையாலும் அங்குள்ள சிவலிங்கப் பெருமானை மனிதர்களும் தேவர்களும் சிவயோகிநாதர் என வழங்குகின்றார்கள்.

சிவயோகிமுனிவருடைய தபோக்கினியைத் தணித்தற்பொருட்டுச் சிவபெருமானது சடையினின்றும் பூமியை அடைந்த கங்கையானது அவ்விடத்தில் சடாதீர்த்தமென்று சொல்லப்படுகின்றது. அத்தீர்த்தம் சிவபெருமானுக்கு ஈசானதிசையில் இருக்கின்றது. அதன் கரையில் வில்வவிருக்ஷம் இப்பொழுதும் பிரகாசிக்கிறது. அதற்குச் சிறிது நிருதிதிக்கில் பிரமதேவர் யாகஞ்செய்தவிடத்தில் பிரமகுண்டம் என ஒரு பரிசுத்த தீர்த்தம் உள்ளது. அதனிடத்துள்ள மிருத்திகையைத் தேவர்களும் மனிதர்களும் விபூதியாகத் தரித்துக்கொள்ளுகிறார்கள். அந்த மிருத்திகையை நெற்றியில் தரிப்பவனுக்கு மிருத்தியு பயம் இல்லை. அவ்விபூதிதரித்தவனைப் பார்த்தமட்டிலேயே பூதம் பிரேதம் பிசாசுமுதலியவை ஓடிப்போம். அத்தீர்த்தக்கரையில் மகிழ விருக்ஷம் இருக்கின்றது. சக்கரதீர்த்தத்திலுள்ள சலத்தை அள்ளிப்பருகினால் எல்லாவியாதிகளும் நீங்கும். அத் தீர்த்தக்கரையில் விஷ்ணுமூர்த்தியால் நெல்லிமரம் வைக்கப்பட்டுள்ளது. கார்த்திகை மாசத்துப் பௌர்ணிமை சேர்ந்த திங்கட்கிழமையில் சூரி

யோதயத்தில் அத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, சிவப்பிரீதியாகக் கன்றுள்ள பசுவைத் தக்ஷிணை வைத்துத், தரித்திரனும் குடும்பஸ்தனும் உள்ள பிராமணன்பொருட்டு முயன்று தானம் பண்ணுகின்றவன் எல்லாவிபாதிகளும் நீங்கப்பெற்றுச் சமஸ்தபாவங்களிலிருந்து விடுபட்டவனுவான். ஜன்மஜன்மாந்தரங்களிலும் அரசனுய்ப் பிறப்பான். முன்கூறிய சடாதீர்த்தத்தில் கார்த்திகை மாசத்து ஞாயிற்றுக்கிழமையில் சூரியோதயத்தில் ஸ்நானஞ்செய்து வில்வமரத்தினடியில் காயத்திரிமகாமந்திரத்தைப் பதினுயிரந்தரம் ஒருவன் செபித்தால் அவன் எல்லாப் பாவங்களும் நீங்கிச் சிவலோகத்திற் கொண்டாடப்பெறுவான். நந்திதீர்த்தத்தில் கிருஷ்ணபக்ஷசதுர்த்தசிசேர்ந்த செவ்வாய்க்கிழமையில்சூரியோதயத்தில் சிவபெருமானுடைய சந்நிதானத்தில் ஸ்நானஞ்செய்து மனநியதிகளையுடையவனுய் அதன்கரையிலுள்ள வன்னிவிருக்ஷத்தினடியில் மிருத்தியுஞ்சயமந்திரத்தைச் செபித்துப் பிராமணர்களுக்குத் தக்ஷிணேபோடு திலதானம் பண்ணுகிறவனுக்கு மிருத்யுபயம் இல்லை. அவன் சிவலோகத்திற் கொண்டாடப்படுவான். காவேரியிற் கலந்துள்ள சூலதீர்த்தத்தில் வியாழக்கிழமையிலாவது சனிக்கிழமையிலாவது ஸ்நானஞ்செய்து பிராமணர்களுக்குப் பூமிதானஞ் செய்கின்றவன் சக்கரவர்த்தியாகப் பிறப்பான். கங்கையில் எல்லாத்தினங்களிலும் ஸ்நானஞ்செய்து அதன்கரையிலுள்ள ஆலமரத்தினடியில் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை லக்ஷம் உருச்செபித்துப் பிராமணர்களுக்கு அன்னதானம் பண்ணுகிறவன் சக்கரவர்த்தியாகப் பிறந்து சிவலோகத்திற் பூசிக்கப்படுவான். இலக்குமிதீர்த்தத்தில் ஆவணிமாசத்துப்பௌர்ணிமைசேர்ந்த வெள்ளிக்கிழமையில் ஸ்நானஞ்செய்து அதன் கரையிலுள்ள வில்வவிருக்ஷத்தினடியில் பிராமணர்களுக்குப் பசுத்தானம் பண்ணுகின்றவன் இவ்வுலகத்தில் தனம் தானியமுதலிய சம்பத்துக்களைப் பெற்று எல்லாவின்பங்களையும் அடைந்து புத்திரன் பௌத்திரன் முதலியவர்களோடிருந்து பின் சிவலோகத்திற் பூசிக்கப்படுவான். சரசுவதிதீர்த்தத்தில் மாசிமாசத்துச் சப்தமி திதிசேர்ந்த புதன்கிழமையில் ஸ்நானஞ்செய்து சாரசுவதமந்திரத்தைச் செபித்து வேதபுத்தகத்தைப் பூசைபண்ணிப் பிராமணர்பொருட்டுக் கொடுப்பவனுடைய வாக்கில் கத்திய பத்தியரூபமாயுள்ள சரசுவதிதேவி ஜன்மஜன்மாந்திரங்களிலும் கங்காப்பிரவாகம்போலத் தோன்று

வாள். அத்தீர்த்தக்கரையில் புன்னைவிருக்ஷம் இப்பொழுதும் இருக்கிறது.

பெருந்தவஞ்செய்துகொண்டிருந்தசிவயோகிமுனிவர் தம் சகோதரர்களோடு சிவராத்திரிதினத்தில் அங்குள்ள சிவலிங்கமூர்த்திக்குட் பிரவேசித்தமையால் அத்தினம் புண்ணியதினமாகக் கருதப்படும். சிவயோகிமுனிவர் இலிங்கத்துட்பிரவேசித்த தினந் தொடங்கி வருஷந்தோறும் அகஸ்தியமுனிவர் சிவராத்திரிதினத்தில் இந்த ஸ்தலத்துக்கு வந்து எல்லாத் தீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்து சிவபூஜை பண்ணி அன்று இரவும் பகலும் நித்திரை செய்யாமலிருந்து சிவபெருமானை வணங்கிப் பாரணம் பண்ணிக் கொண்டு மீண்டு தம்முடைய ஆச்சிரமத்துக்குச் செல்லுகின்றார்.

அரசனே! நீ அந்தத்தலத்துக்குச்சென்று வருஷந்தோறும் சிவராத்திரிதினத்தில் சுவாமிதீர்த்தங்கொடுக்கத்தக்கதாக மகோற்சவம் நடத்தக்கடவாய் என்று நாரதமுனிவர் கூறக்கேட்டுத், தருமவர்மன் என்னும் அரசன் இந்தத் தலத்திற்கு வந்து வருஷந்தோறும் சிவராத்திரியுற்சவம் நடத்தினன். இந்த க்ஷேத்திரம் திவ்யமாயும் க்ஷேத்திரங்களுக்குள் உத்தமோத்தமமாயும்உள்ளது. இந்தத் தலபுராணத்தை எப்பொழுதும் படிப்பவரும் கேட்பவரும் கேட்கும்படிசெய்பவரும் எல்லாப்பாவங்களும் நீங்கி நன்மையடைவார்கள். இந்தத் தலமகிமை தேவர்களாலும் பிராமணர் முதலியோராலும் கொண்டாடப்பட்டது. எல்லாத் தலங்களுக்கும்முதலில் தோன்றிய இத்தலமகிமை உயர்ந்ததாகும். இது தருமம், பொருள், இன்பம், மோக்ஷம் என்னும் நான்குபலனையும் சுலபமாகக்கொடுக்கும்.

சிவயோகியார் மகிமைச் சருக்கமுற்றிற்று.

---

திருவியலூர்ப் புராண முற்றுப்பெற்றது.